அடியேனை அன்புவந்து ஆட்கொண்ட சிவானந்த வள்ளலது திருவடி யிணையில் சமர்ப்பிக்கப்பட்டது.

— சித்பவானந்தா

## பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம்

## முதல் அத்தியாயம்

## அவதாரமும் இளம்பருவமும்

கங்கை நதி அமுத வெள்ளமெனப் பாய்வதால் வளத்திலும் வனப்பிலும் சிறந்து விளங்கும் வங்க நாட்டில், ஹூக்ளி ஜில்லாவில், கமார்ப்புகூர் என்னும் பெரிய கிராமமொன்று உண்டு. இது, கல்கத்தாவிற்கு மேற்கே சுமார் எண்பது மைல் தூரத்திலுள்ள ஒரு வியாபார ஸ்தலம். நான்கு பெரிய பட்டணங்களுக்குப் போகும் சாலைகள் இக்கிராமத்தில் சந்திப்பதால் இங்கு ஜனப் போக்குவரவு மிகுதியு முண்டு. இவ்வூரினுள் காட்சி தரும் பல தேவாலயங்கள் கிராம வாசிகளின் தெய்வ பக்திக்குப் புறச் சின்னங்களாய் விளங்குகின்றன. சுமார் நூறுண்டுகளுக்கு முன்னர் இவ்வூரிலே க்ஷுதிராம் சட்டர்ஜி என்ற பிராம்மணோத்தமர் ஒருவர் வாழ்ந்து வந்தார். தலைமுறை தலைமுறையாக தெய்வாராதனையிலும் நல்லொழுக்கத்திலும் சிறப்புற்றிருந்த குலத்தில் வந்தவர் இவர். விதி வசத்தால் இவ்வேதியர் பிதிரார்ஜித சொத்தை இழந்து வறுமை வாய்ப்பட்டிருந்த போதிலும் குலநெறி தவறாத நேர்மையுடையவராயிருந்தார். இராமபிரானது மலரடியிணையில் இவர் மாறாத பக்தி பூண்டொழுகி வந்தார். எளிய வாழ்வு, உயரிய நோக்கம் என்பவை போன்ற அந்தணரது செந்தண்மை யாவும் ஒருங்கே க்ஷுதிராம் சட்டர்ஜி மாட்டு மிளிர்ந்தன. ஆதலின் கிராம வாசிகளனைவரும் இவரைத் தேவரெனவே போற்றி வந்தார்கள். சந்திரமணி தேவி யென்னும் பெண்மணி இப்பெரியாருக்கேற்ற பத்தினியாக வாய்த்திருந்தார். தூய உள்ளம் படைத்த இந்த தேவியார், கணவனைப் பேணுதல், இரந்தார்க்கு இல்லையெனாது ஈதல், தம் குல தெய்வமான இரகுராமனை

பஜித்தல் ஆகிய இம் மூன்று விரதங்களையும் சிறப்பாகக் கடைப்பிடித்து ஒழுகி வந்தார். நல்லறமாகிய இல்லற நெறியில் நின்ற தம்பதிகள், இராமகுமாரர் இராமேஸ்வரர் என்ற இரு புதல்வர்களையும், காத்யாயினி யென்ற பெண்ணொருத்தியையும் முறையே பெற்றெடுத்து வளர்த்து வந்தனர்.

சிறந்த மகாவிஷ்ணு ஸ்தலமாகிய கயாவுக்கு யாத்திரை போக வேண்டுமென்ற பேரவா சட்டர்ஜிக்கு நெடுங் காலமாயிருந்து வந்தது. விரைந்து வந்துகொண்டிருந்த வயோதிகத்தால் அங்கம் தளர்வுறு முன்னமே தமதெண்ணத்தை நிறைவேற்ற விரும்பிய வேதியர் கால் நடையாகக் கயாவுக்குப் புறப்பட்டார். வழிச்செலவுக்கு அவர் கையில் பொருள் சிறிதுமில்லை. எனினும் தம்மைக் காக்கும் கடவுளே கதியென்று அவர் கிளம்பி வழியில் பிக்ஷை எடுத்துக்கொண்டே சென்று திருமாலின் உறைவிடம் சேர்ந்தார். அங்கு அம்மாதவனின் அருளால் தாம் படைத்த பிண்டம் தென்புலத்தார்க்குத் திருப்தியளித்ததுணர்ந்த க்ஷுதிராம் சட்டர்ஜி அன்றிரவு அளவிறந்த மகிழ்ச்சியுடன் நித்திரை போனார். அவ்வாறு உறங்கும் போது நள்ளிரவில் பேரொளி வீசும் திருமேனியுடன் கமலக்கண்ணன் அவரது கனவிற் றோன்றி, "அன்ப, அறநெறி வழுவும் உலகைக் காக்கும் பொருட்டு நாம் அடிக்கடி உலகில் உருத்தாங்குகிறோம். தர்மம் தளர்ந்திருக்கும் இந்நாளில் நாம் தரணியில் தோன்றுவது உசிதம். ஆதலால் நுமது இடையறாப் பக்திக்குக் கைம்மாறாக நும் மகவாகப் பிறக்க எண்ணியுள்ளோம்" என்று பகர்ந்தருளினார். அதுகேட்ட சட்டர்ஜிக்குப் பேருவகை யுண்டாயிற்று. ஆனால் திடீரென்று அவருக்கு ஓர் ஐயமுண்டாகி, "தேவரீருக்கேற்ற திருப்பணி செய்ய எளியேன் வல்லவனாவேனோ?..." என்று விண்ணப்பித்துக் கொண்டிருக்கையில் அவ்வானந்தக் கனவினின்று அவர் திடுக்கிட்டு எழுந்தார். கனவின் கருத்து ஒன்றும் அறியாத அவ்வந்தணர் கதாதரப் பெருமானை வழுத்தி விட்டுத்

திரும்பவும் நித்திரை போனார். அதன் பிறகு ஒருநாள் சந்திரமணி தேவியார் தமது இல்லத்தருகிலிருந்த சிவலிங்கத்துக்கு வில்வம் சாத்திக் கொண்டிருந்த போது, லிங்கத்தினின்று ஜோதி ஒன்று கிளம்பித் தம்முட் பிரவேசிப்பதைப் பார்த்து பயந்து மூர்ச்சையாய் விழுந்து விட்டார். இந்த நிகழ்ச்சிகளின் மர்மத்தை உணரமுடியாத தம்பதிகள், ''இறைவன் திருவுளம்போல் ஆகுக'' என்று எண்ணியிருந்தனர். அச்சமயம் தேவியார் சூல் கொண்டு மகிழ்வுற்றிருந்தார்.

இது இவ்வாறிருக்க, சென்ற நூற்றுண்டிலே நமது பாரத நாடு எய்தியிருந்த தாழ்மையும் புன்மையும் பகரவொண்ணுதவையாகும்; மேலைநாட்டு நாகரிகத்தின் பகட்டைக்கண்டு மயங்கிப்போன பாரததேசம், தான் தொன்று தொட்டுக் கடைப்பிடித்து வந்திருந்த பாரமார்த்திக வாழ்வில் பற்றிழந்துவிட்டது. இகத்தில் இன்பம் தரும் பெருமித வாழ்வு ஒன்றே மேலான இலட்சியமெனக் கருதப்படலாயிற்று. எனினும் தேசமக்களில் ஒரு சிலர் அத்யாத்மிக வாழ்வின் பெயருங்கூட இல்லாது போம் வண்ணம் அதைப் புறக்கணித்துவிட விரும்பவில்லை. ஆதலால் அவர்கள் அவ்வுயர்ந்த அத்யாத்மிக வாழ்வு முறையோடு ஒவ்வாதவையும், தங்களாலும் தங்களை ஆளுபவர்களாலும் போற்றப் பட்டவையுமான அயல் நாட்டு நோக்கங்களையும், பழக்க வழக்கங்களையும் சீர்திருத்தம் என்னும் பெயரால் நமது பழம் பெரும் சமயத்தினுள் நுழைத்து வந்தார்கள். சநாதன தர்மம் அல்லது இந்து மதம் இவ்வாறு திரிவுபட்டுப்போனது ஒரு புறமிருக்க, மற்றொரு புறத்தில், ''வைதிகம்'' என்னும் பெயரால் வெறும் சடங்கு, அர்த்தமிலா ஆசாரம், லௌகிக பழக்க வழக்கம் முதலிய முக்கியமற்ற அம்சங்களையே சநாதன தர்மம் எனக்கொண்டு வேறொரு சாரார் ஒழுகி வந்தனர். உண்மை வைதிகத்துக்கு அடிப்படையான தூய்மை, சுய நலம் கருதாமை, விவேகம், வைராக்கியம், பக்தி, தவம் முதலிய செந்நெறிகள் யாண்டும்

இல்லாமற் போய்விட்டன. இன்னும் ஒரு பான்மையார் மாட்டு ஏட்டுக் கல்வியும், நூலின் உட்கருத்தை அறிவுக்கு எட்டியவாறெல்லாம் வியாக்யானம் செய்வதுமே மேலான அறநெறியென விளங்கின. சுருங்கச் சொல்லின். மெய்யான தர்மம் மங்கிப்போய் அதர்மம் யாண்டும் ஓங்கி வந்தது.

ஆங்கில அரசாங்கத்தார் கி. பி. 1836-வது ஆண்டிலே அமுலுக்குக் கொண்டுவந்த பல சீர்திருத்தங்கள், நாடு எய்தியிருந்த புன்மையைப் பெருக்குவதற்கே ஏதுவாக வந்து சேர்ந்தன. நமது பழம் நாகரிகமோ, கல்வி முறையோ, உயர் இலட்சியங்களோ சிறிதேனும் தலையெடுக்க முடியாமற்போயின. நாட்டின் தலைமைப் பட்டணமாகிய கல்கத்தா நகரமே நவீன வாழ்வு முறைக்கும் தலைமையான உறைவிடமாயிருந்தது. சீர்திருத்தம் அமுலுக்கு வந்த அதே 1836-வது ஆண்டிலே, பிப்ரவரி மாதம் 17-ந் தேதியன்று அதிகாலையிலே, கிரகங்கள் பல உச்சத்து நின்ற சுப முகூர்த்தத்திலே, கமார்ப்புகூரின் உத்தம தம்பதிகளாகிய க்ஷுதிராம் சட்டர்ஜிக்கும் சந்திரமணி தேவிக்கும் நான்காவது மகவாக நமது சரித்திர நாயகராகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அவதரித்தார். கயா க்ஷேத்திர பதியாகிய கதாதரப் பெருமானின் திருவருளாற் பிறந்த குழந்தையாதலின் அதற்குப் பெற்றோர் கதாதரன் என நாமம் சூட்டினர். புதிதாக நாட்டினுள்ளே வந்து புகுந்திருந்த படாடோபப் பெருமிதங்களுக்கிடையே இக்குழந்தை நடத்திய பாரமார்த்திகப் பெருவாழ்வின் வரலாற்றைக் கூறுவதே ஈண்டு நமது நோக்கமாகும்.

தங்களது சொற்ப வருவாயைக் கொண்டு பெற்றோர் பிள்ளையைப் பெரிதும் பாராட்டி வளர்த்து வந்தனர். குழந்தையின் மோகன முகத்தில் இடையறாது ததும்பிய புன்னகையும், அதன் இனிய சுபாவமும் ஊரார்து உள்ளத்தை ஒருங்கே கவர்ந்தன. வயது

முதிர முதிர, அச்சம் என்பது இன்னதென்றறியாத சிறுவன் குற்றமற்ற சேஷ்டைகள் பல செய்யத் தொடங்கினான். இருண்டபின் போக யாரும் அஞ்சும் படியான இடங்களுக்கும் சுடுகாட்டுக்கும் அவன் பயம் சிறிதுமின்றி நள்ளிரவிலுங்கூடப் போய் வருவான். பள்ளிக்கூடத்தில் பகல் முழுவதும் உட்கார்ந்திருப்பது அவனால் இயலாத காரியமாயிருந்தது. கல்வியில், முக்கியமாக கணிதத்தில், கதாதரனது கருத்து சிறிதேனும் நாடவில்லை. களிமண்ணால் தெய்வங்களின் வடிவம் அமைப்பதிலும், புராண இதிகாசக் கதைகள் கேட்பதிலும் அவனுக்கு அதிக விருப்பமிருந்தது. தோத்திரப் பாக்களை ஒரு தடவை கவனித்துக் கேட்டுவிட்டால் என்றும் மறவாது மனதில் வைத்துக்கொள்ளும்படியான ஞாபக சக்தி அவனிடத்திருந்தது. இளம்பிராயத்திலேயே அவன் அவ்விதம் கற்றுக்கொண்ட பாடல்கள் பலவாகும். பள்ளிப்பிள்ளைகள், ஆடவர், மகளிர் யாவர் மாட்டும் கதாதரன் முதன்மை பெற்றிருந்தான். அவனுடைய அன்பின் ஆட்சிக்கு அனைவரும் அடங்கி நடந்தார்கள். எழில் மிகுந்த இயற்கைக் காட்சிகளைக் கண்ட மாத்திரத்தில் கதாதரன் பேரானந்தங் கொண்டு மெய் மறந்து விடுவான். ஒரு முறை கார் காலத்தில், வானத்தை மூடி யிருந்த இருண்ட மேகங்களுக்கடியில், வெண்ணிறக் கொக்குகள் கூட்டமாகப் பறந்து போவதை கதாதரன் பார்த்தான். உடனே அவனுக்கு உடல் நினைவு போய் உள்ளொளி பெருகிவிட்டது. இது மயக்கமோ, மூர்ச்சையோ அல்லது பேய் பிசாசின் வாதனையோவென்று அவன் மெல்லியல் அன்னை மிகவும் வருந்தினாள். இயற்கை மாட்சியும், இறைவனைப் பற்றிய பேச்சும் இவ்விளைஞனை மனம் மொழிக் கெட்டா உயர் நிலைக்கு அழைத்துச் செல்லுதல் நாளடைவில் அதிகமாகி வந்தது.

கதாதரனுக்கு வயது ஏழானபோது க்ஷுதிராம் சட்டர்ஜி தேகவியோக மடைந்தார். தந்தையின் மர

ணம் அவனது உள்ளத்தில் பெரும் மாறுதல்களை உண்டுபண்ணுமற் போகவில்லை. துயருற்றிருந்த அன்னைக்குக் கதாதரன் அது பரியந்தம் உபத்திரவம் விளைவித்து வந்ததை நிறுத்தி விட்டுத் தன்னால் இயன்ற உதவி புரிந்து வந்தான். இப்போழ்து இத்துடன் மற்ெறாரு பணியையும் சிறுவன் ஏற்றுக்கொண்டான். பூரி ஜகந்நாதத்துக்கு யாத்திரை செல்லும் சாதுக்கள் வழியில் கமார்ப்புகூரிலிருந்து தர்மசாலையில் தங்குவது வழக்கம். கதாதரன் அடிக்கடி அவர்களிடம் போய்ப் பழகி சன்மார்க்க விஷயங்களைப்பற்றிக் கேட்டறிந்தது மல்லாமல் தன்னால் இயன்ற குற்றேவல்கள் அவர்களுக்குச் செய்து வந்தான். இராமாயண மகாபாரதக் கதைகளைத் தெருக்கூத்துகளில் பார்த்து அவன் நன்கு கற்றறிந்தான். நாடகக்காரர்களின் ஆடல் பாடல்களை அப்படியே அபிநயித்து அனைவர்க்கும் சிரிப்பூட்டிவிடுவது அவனுடைய முக்கிய விளையாட்டுகளில் ஒன்று. சில வேளைகளில் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்குப் போகவொட்டாது திரட்டி கிராமத் தண்டையிலிருந்த மாந்தோப்புக்கு அழைத்துச்சென்று விடுவான். அங்கு அவர்கள் நாடகங்கள் நடிப்பதிலும் பாடல்கள் பாடுவதிலுமே நாள் முழுதும் கழித்து விடுவார்கள். இதற்காக அவர்கள் மீது கோபங் கொண்டிருந்த உபாத்தியாயர் முன்னிலையிலேயே ஒரு முறை கதாதரன் நாடகம் நடித்துக் காட்டி அவரது சினத்தை ஆற்றிச் சிரிப்பு மூட்டினான்.

தனக்கு எது நன்மையெனத் தோன்றுகிறதோ அதினின்று கதாதரன் சிறிதும் பிறழமாட்டான். இந்த இயல்பு ஒரு சிறுவன்பால் வேண்டத் தகாத பிடிவாதமென்று பலர் கருதினர். ஆயினும் மூத்தோர்களின் மன வருத்தத்தையும் பொருட்படுத்தாது தன் வழியே போவது அவன் வழக்கம். அர்த்தமில்லாத லௌகிக பழக்க வழக்கங்களில் இவனுக்கு அக்காலத்திலேயே பற்றுக் கிடையாது. உபநயனச் சடங்கு முடிந்தவுடன்

தனது அன்னையின் தோழியாகிய தனம் என்னும் கொல்ல மாதிடமிருந்து முதன் முதல் பிக்ஷை யேற்கக் கதாதரன் சென்றான். அந்தணர் ஒழுக்கத்துக்கு அது அடாதென்று எல்லாரும் மறுத்தபோது தனது வாக்குத்தத்தத்தினின்று மாற முடியாதென்று கூறித் தான் எண்ணியவாறே செய்து முடித்தான்.

கதாதரனது நடிப்புத் திறமையை ஊராரனைவரும் நன்கறிந்திருந்தனர். ஒரு சிவராத்திரி தினத்தன்று சிவ வேடம் பூணுதற்கிருந்த நாடகக்காரனுக்குத் திடீரென்று நோய் வந்து விட்டது. அவனுக்குப் பதிலாக நல்ல ஆள் யாரும் அகப்படாது போகவே, கடைசியாகக் கதாதரனைப் பிடித்தார்கள். அவன் அரையில் புலித் தோல் உடுத்தி, தலையில் செஞ்சடை வைத்து, அதில் தூவெண் மதிசூட்டி, உடலெங்கும் திருநீறு பூசி, உருத்திராக்ஷ மாலை அணிந்து, கையில் மானும் மழுவும் கொடுத்தபோது. அவைகளைப் பிடித்துக் கொள்ளவும் முடியாமல் கதாதரன் சமாதியில் ஆழ்ந்து விட்டான். பையன் மார்படைப்பால் மாண்டு போனானோ வென்று அஞ்சி ஊரார் நாடகத்தை நிறுத்திவிட்டார்கள். ஆனால் அவனது முகத்தில் திகழ்ந்த ஒளியும் கண்களினின்றும் இடையிடையே பனித்தாரை போலப் பெருகிய ஆனந்த பாஷ்பமும் நம்பிக்கை யூட்டிவந்தன. மறுநாள் பொழுது புலர்ந்தபோதுதான் கதாதரனுக்குச் சிவப்பிரக்ஞை மாறி உலக ஞாபகம் வந்தது.

கதாதரனின் தமயனார் இராமகுமாரர் கல்கத்தாவில் சமஸ்கிருத பண்டிதராயும், ஜோதிடராயும், சில குடும்பங்களுக்குப் பூஜகராயும் வேலை பார்த்து ஜீவனம் நடத்திவந்தார். கதாதரனோவெனில் சிறிது சிறிதாகப் பள்ளிக்கூடம் போவதை அடியோடு நிறுத்திவிட்டு வீட்டில் இரகுவீரர் பூஜை செய்வதற்கும் அன்னைக்கு உதவிபுரிவதற்கும் அமர்ந்துகொண்டான். ஓய்வு வேளைகளில் அவன் வழக்கம்போல் பையன்களுடன் சங்கீர்த்த

னங்கள் பாடியும் நாடகமாடியும், மண் விக்கிரகங்கள் செய்தும் காலங்கழித்து வந்தான். இளைஞனுடைய எதிர்கால க்ஷேமத்தில் கவலையுற்றிருந்த இராமகுமாரர் ஒருதடவை கமார்ப்புகூருக்கு வந்திருந்தபோது அவனைப் பற்றி அன்னையுடன் கலந்து பேசிவிட்டு, ஏதாவது தொழில் பழகும் பொருட்டும், தம்முடனிருந்து சிறிது கல்வி கற்கும் பொருட்டும் அவனைக் கல்கத்தாவுக்கு வரும்படி அழைத்தார். அப்போது பதினேழு வயது வாலிபனாயிருந்த கதாதரன் அதற்கிசைந்து, தான் பிறந்தது முதல் இன்புற்று வாழ்ந்து வந்த கிராமத்தை யும், தன்பால் பேரன்பு காட்டிவந்த கிராமவாசிகளை யும் விட்டுப் பிரிய மனமில்லாமல் பிரிந்து நகரம் ஏகினான்.

## இரண்டாம் அத்தியாயம்

## தக்ஷிணேஸ்வர ஆலயம்

நாம் பார்த்து வந்த பூஜகர் தொழிலைத் தம்பியிடம் ஒப்புவித்துவிட்டு இராமகுமாரர் தமது பள்ளிக் கூடத்தை விருத்திசெய்ய முயன்று வந்தார். கதாதர னுக்கு நியமித்திருந்த வீடுகளில் அவன் செய்த பூஜை, வழக்கமாக மற்றவர்கள் செய்யும் பூஜையினின்று முற்றும் மாறுபட்டிருந்தது. அவசர அவசரமாகத் தன் கடனை முடித்துவிட்டு ஓடுவதற்குப் பதிலாக அவன் பக்தி விஸ்வாசத்துடன் தினந்தோறும் நெடு நேரம் பூஜைசெய்தது வீட்டார்க்கு வியப்புண்டாக் கிற்று. அவனது தூய இனிய சுபாவம் ஆடவர் மகளிர் யாவரையும் வசப்படுத்தியது. கமார்ப்புகூரில் போலவே கல்கத்தாவிலும் பலர் அவனைப் பெரிதும் போற்றி

வந்தனர். இங்கும் அவன் தன் அன்பர்களுடன் ஆனந்தமாகக் காலம் போக்கினானே யல்லாது, அண்ணன் விரும்பிய விதம் கல்விப் பயிற்சியில், சிறிதும் கருத்தைச் செலுத்தினானில்லை. இரண்டு மூன்று மாதம் கழியும் வரையில் இராமகுமாரர் அவன் போன வழியே விட்டுவிட்டுப் பிறகு கல்வியின் சிறப்பை எடுத்துக்காட்டி, அதை இளமையிற் கல்லாது வீண் காலம் போக்குவது சரியன்றெனச் சிறிது கடிந்து புத்தி புகட்டினார். "வயிற்றுப் பிழைப்புக்குரிய கல்வி கற்பதனால் நான் அடையும் பயன் என்ன? ஒன்றுமில்லையே" என்று சிறிதும் தயங்காது இளைஞன் மறுமொழி விடுத்தான். வயதில் சிறியவனாயிருந்தும் கதாதரன் மாந்தரது மனப் போக்கை நன்கறிந்திருந்தான். உலகத்தவர் உழன்று அவஸ்தைப் படுவதெல்லாம் சுக போக வாழ்வுக்கே யென்றும், அவர்கள் கற்கும் கல்வியெல்லாம் பெயர் புகழுக்காகவோ அல்லது பொருளீட்டுவதற்காகவோதான் என்றும் கதாதரன் நன்கு அறிந்திருந்தான். பெறுதற்கரியதும், தன் உள்ளங் கவர்ந்ததுமான இறைவன் அருட் பேற்றுக்கு அக்கல்வி சிறிதும் பயன் படாதென்றறிந்து அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. நாளேற ஏற வருவாய் குறைந்து வந்த குடும்பத்தைப் பற்றியும் தனது க்ஷேமத்தைப் பற்றியும் அவன் கவனமற்றிருந்தது அண்ணனுக்குக் கவலை யளித்து வந்தது.

இக்காலத்தில், தெய்வ சங்கற்பமாக மற்றொரு நிகழ்ச்சி நடைபெற்றது. கல்கத்தாவினின்று நான்கு மைல் தூரம் வடக்கே தக்ஷிணேசுவரத்தில் கங்கை நதிக்கரையில் பெரிய காளி கோயிலொன்று இராணி ராசமணி யென்ற ஜமீன்தாரிணி ஒருவரால் நிர்மாணிக்கப்பட்டது. இவ்வாலயத்திலே சக்தி, சிவம், விஷ்ணு ஆகிய மூன்று தெய்வங்களும் ஒருங்கே ஆராதிக்கப் பட்டதுமல்லாமல், சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும் எப்பொழுதும் அமுது வழங்குவதற்கான ஏற்பாடும் செய்யப்பட்டிருந்தது. கோயிலைச் சுற்றிலுமிருந்த விஸ்தாரமான நந்தவனங்களும், அடர்ந்த மரச் சோலை

களும், ஆங்காங்கு அமைக்கப்பட்டிருந்த குடிசைகளும், தடாகங்களும், அருகாமையில் அலையெறிந்து ஓடிய பாகீரதி நதியும் ஒன்றுகூடி அவ்வாலயத்துக்கு இணையில்லா வனப்பளித்து, அதைக் காண வருவோருள்ளங்களை யெல்லாம் குளிரச் செய்தன. இவ்வாலயத்தில் அர்ச்சகர்களாக அமரும்படி சட்டர்ஜி குடும்பத்தாரை இராசமணி அம்மையார் பணிந்து வேண்டிய செயலால், அக் கோயிலுக்கு மட்டுமன்றி உலகுக்கே ஒரு பெரு நன்மை செய்தவராஞர். 1855-வது ஆண்டில் தமக்கு வயது பத்தொன்பதாயிருந்தபோது, கங்காதீர வாசம் செய்வதில் விருப்பமுடையவராயிருந்த கதாதர சட்டர்ஜி, காளி மாதாவின் சந்நிதியில் அர்ச்சகராக அமர்ந்த தம் தமயனுருடன் தக்ஷிணேசுவரத்தில் இனிது வாசம் செய்யலுற்ருர்.

இராணி ராசமணியின் மருமகர் மதுராநாத விஸ்வாஸ் என்பவர் ஆலயத் திருப்பணியை மேற்பார்வை செய்து வருகையில் கதாதரரது மாண்பை நன்கு கவனித்து வந்தார். இவரது அழகிய திருமேனியும் இனிய சுபாவமும், மாருமுகமலர்ச்சியும், இன்னிசைக் குரலும், பேரன்பும் மதுராநாதரது உள்ளத்தை முற்றிலும் கவர்ந்தன. மேலும் இவரது அசாதாரணமான மனப் போக்கையும், எதற்கும் அஞ்சாத் தன்மையையும், பொருள் ஈட்டுதலில் இவர் காட்டிய அசட்டையையும், இவர் தமையனுரிடத்திருந்து மதுராநாதர் தெரிந்து கொண்டார். பிறர் ஏவலுக்குட்பட்டு வினையாற்றும் சுபாவம் இவரிடத்துக் கிடையா தென்பதையும் அவர் அறிந்தார். ஆயினும் தேவிக்குத் திருப்பணியாற்றும் பொறுப்பை பக்தியிற் சிறந்த இவர்பால் எப்படியாவது ஒப்புவிக்க விரும்பிய மதுராநாதர், ஒருநாள் தமதெண்ணத்தைச் சிறிது ஆவலுடன் இவருக்குத் தெரிவித்தார். அவர் விரும்பியவாறே பூஜைசெய்ய இணங்கிய கதாதரர், தேவியின் அலங்கார ஆபரணங்களுக்குக் காவலிருக்கமட்டும் தம்மால் இயலாதென்று

கூறினர். அக் கடனாற்றுவதற்கு இவரது உறவினராகிய ஹிருதயர் என்ற ஒருவர் நியமிக்கப்பட்டபோது வேறோர் எண்ணமுமின்றி ஜகன் மாதாவுக்கு வழிபாடு செய்ய இசைந்தார்.

பூஜை செய்ய இவர் அமர்ந்த சொற்ப நாளைக்குள் நிகழ்ந்த சம்பவம் இவரது ஞான போதத்துக்குச் சான்ருக நிகழ்ந்தது. விஷ்ணு ஆலயத்தின் மூல மூர்த்தியாகிய இராதாகிருஷ்ண விக்கிரகத்தின் கால் ஒன்று அர்ச்சகரின் அஜாக்கிரதையால் ஒடிந்து போக, அவ்விக்கிரகத்தின் மூலம் கண்ணபிரானைப் பூசைசெய்வது முறையோ வென்ற அச்சம் இராணி ராசமணி தேவிக்கு உண்டாயிற்று. இதை முன்னிட்டு சாஸ்திர விதி விளக்கவந்த பண்டிதர்களுக்குள்ளே அபிப்பிராய பேதம் உண்டாக்கி விட்டபடியால் கோயிலெங்கும் குழப்பமுறும்படி அவர்கள் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். அதைச் சற்று நின்று கேட்டுக்கொண்டிருந்த கதாதரர், "ஏன்? நாளைக்கு மதுராநாதரது கால் கை தவறி ஒடிந்துபோனல் இராசமணி அம்மையார் அவருக்குச் சிகிச்சை செய்வாரா, அல்லது அவருக்குப் பதிலாக மற்ருெரு மருமகனைத் தேடிப் போவாரா?" என்று வினவினர். பூசலிட்டுக் கொண்டிருந்த பண்டிதர்கள் இதைக் கேட்டதும் முதலில் திகைப்புற்று பின்னர் மகிழ்ச்சி யடைந்து சென்ருர்கள். விக்கிரகங்கள் அமைப்பதில் வல்லவராகிய கதாதரர் தாமே அம்மூர்த்தியைப் பிறகு செப்பனிட்டுக் கொடுத்தபோது இராசமணி அம்மையார் ஆனந்த வெள்ளத்திஞல் மூழ்கினர்.

## மூன்றும் அத்தியாயம்

# தாயின் தரிசனம்

தேவி மந்திர உபதேசம் பெற்ற பின்புதான் பூஜை செய்வது முறை யாதலால், கெளராம் பட்டாச்சாரியார் என்னும் பெரியாரிடமிருந்து கதாதரர் தீக்ஷை பெற்றுக்கொண்டார். மந்திரம் செவியில் உச்சரிக்கப் பட்டவுடனே அவர் உடல் புளகித்துப் பரவசமடைந்ததைப் பார்த்த பட்டாச்சாரியார் வியப்படைந்து தேவியின் திவ்விய தரிசனம் அவருக்கு அதி சீக்கிரம் கிட்டும்படி மனமுவந்து ஆசிர்வதித்தார். கதாதரர் செய்யும் பூஜைக்கும் ஏனைய அர்ச்சகர்கள் செய்த பூஜைக்கும் மிக்க வித்தியாசமிருந்தது. ஆராதனை செய்வதற்கு அவர் அன்னையின் சந்நிதியில் வந்து நின்றதும் அக்கம் பக்கத்தைப் பற்றிய எண்ண மனைத்தையும் மறந்துவிடுவார். திக் பந்தனம், பூதசுத்தி முதலிய கிரியைகள் வெறும் வார்த்தையோடும் கை கால் அசைத்தலோடும் நின்றுவிடாமல், தாம் சங்கற்பித்த விதமே நடைபெறுவதை நேரே பார்த்துணர்வார். பேருவகையுடன் மலரும் சந்தனமும் சாத்தித்தேவியை அலங்கரிப்பார். பூஜைசெய்யச் செய்யப் பிரபஞ்ச வாழ்வு நிலையற்றதென்ற எண்ணமும் இவர்பால் அதிகரித்து வந்தது. அதுகாலை தமையனார் இராமகுமார சட்டர்ஜி பரலோகப் பிராப்தியடைந்தது இவரது விவேக வைராக்கியத்தை உறுதிப்படுத்தியது. தேவியின் அருட்பிரசாதம் பெறுவிடின் ஜன்மம் வியர்த்தமாய்ப் போய்விடுமென்று அஞ்சினர். தருணம் வாய்த்த போதெல்லாம் ஏகாந்தத்தைநாடி கங்கா தீரத்துக்கோ, நந்தவனத்துக்கோ போய்விடுவார். தம்மைச் சூழ்ந்துள்ளோர் விஷயாதிகளில் மூழ்கி யிருக்கையில் இவர்மட்டும் பாரமார்த்திகத்தை நாடியதைப் பார்த்தவர்கள் இவருக்குப் பைத்தியமோவென்று சந்தேகப்பட்டார்கள்.

கோயில் எல்லைக்குள் பஞ்சவடி என்ற ஐந்துவித மரங்கள் சூழ்ந்த சோலை யொன்று உண்டு. அதற்குச் சற்றுத் தூரத்தில் நெல்லிமரம் ஒன்றிருக்கின்றது. ஒரு காலத்தில் அது மயானக் கரையா யிருந்தபடியால் பகலி லுங்கூட அவ் வடர்ந்த சோலைக்குள் நுழைய யாருமே துணியார். ஆனல் நள்ளிரவில் கதாதரர் அங்கே சென்று நெடுநேரமிருந்து வந்ததை ஹிருதயர் பல நாள் இடை விடாது கவனித்து வந்தார். "இவன் நெஞ்சழுத்தக் காரனே? அல்லது உண்மையிலேயே பைத்தியம் பிடித்துவிட்டதோ?" என்ற ஐயம் ஹிருதயருக்கு முண் டாயிற்று. பயமுறுத்தி அவரை அங்கே போகாமல் தடுக் கும்பொருட்டு அவர் சென்ற திசையை நோக்கிப் பன் முறை கல் எறிந்து பார்த்தார். ஆனல் இதற்கெல்லாம் அஞ்சி நின்றவரல்லர் கதாதரர். வனத்தில் அவர் என்ன தான் செய்து வந்தாரென்று தெரிந்துகொள்ள ஆவ லுற்ற ஹிருதயர் ஓரிரவு தீவத்தி எடுத்துக்கொண்டு அவரைத் தேடிச் சென்றார். வேஷ்டி, உத்தரீயம், பூணூல் முதலியவைகளைக் களைந்து ஒரு பக்கம் வைத்து விட்டு, கதாதரர் நெல்லிமரத்தடியே நிஷ்டையிலிருந் ததை அவர் பார்த்து வியந்து பன்முறை கூவியழைத் தார். ஆனல் கதாதரரோ புலன்களைப் பூட்டிவிட்டு உள் முக நோக்கங்கொண்டு வார்த்த சிலைபோல் வீற்றிருந் தார். எனவே, அவர் காதில் சத்தமொன்றும் விழவில்லை. இத்தகைய விபரீத நடத்தைக்குக் காரணம் யாதோ வென்று ஹிருதயர் வினவ, கதாதரர் "ஈசுவர சிந்தனைக்கு இடையூறு யிருக்கும் எட்டு அழுக்குகளில் ஜாதியபிமான மும் ஒன்று. நான் பிராம்மணன், உயர்குலத்தவன் என் னும் எண்ணம் முற்றிலு மகன்று, சிறு குழந்தையைப் போல பேத புத்தி யில்லாதிருப்பவன் மட்டுமே திருவரு ளுக்குப் பாத்திரனாகிறான். ஆதலின் நான் ஜகன்மாதா வைத் தியானிக்கும்போது பூணூலையுங்கூடக் கழற்றி விடுகிறேன். நிஷ்டை புரிதற்கு நள்ளிரவு வசதியான நேரம்" என்றார்.

அம்பிகையின் தரிசனம் பெறுவ தெங்ஙனம் என்ற ஒரே எண்ணம் அல்லும் பகலும் அவரது உள்ளத்தை உருக்கி வாட்டியது. "இராமப் பிரசாதருக்குக் காட்சி கொடுத்த அன்னாய், எனக்கும் உன் திவ்விய தரிசனம் தந்து அருள் புரியாயோ? உன்னைக் காணாவிடின் நான் எவ்வாறு உய்வேன்?" என்று அவர் ஓயாமல் வருந்தி வேண்டுவார். அஸ்தமன வேளையில் கோயில் மணி யோசை கேட்ட உடனே, "எனது அற்ப ஆயுளில் இன் னும் ஒரு நாள் வீணாய்ப் போய்விட்டதே! என் அன் னையை இன்னமும் தரிசித்திலனே? தாயே! காலன் வந்து கவருமுன்னே இன்னருள் சுரந்து எனக்குத் தரிசனம் தாராயோ? உன்னைப் பிரிந்திருக்க ஆற்றாத என் முன் வாராயோ?" என்று இவ்வாறு புலம்புவார். என்புருக, உடல் குழைய, தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிய, மனம் அனலிலிட்ட மெழுகுபோல் இளக, தேவியை வேண்டுவார்; பாடுவார்; பதறுவார். தாயைக் காணவில்லையே யென்னும் ஆறாத் துயரத்தால் முகத் தைத் தரையில் தேய்த்துக்கொண்டு தேம்பி அழுவார்.

இக்காலத்தில் முறைப்படி பூஜைசெய்ய அவரால் இயலாது போய்விட்டது. சந்நிதியில் கற்சிலைபோல அசைவற்று நெடுநேரம் உட்கார்ந்திருப்பார். மனம் தடுமாறினவனைப்போலக் காரியம் செய்வார். பிறகு குழந்தையைப்போல் அழுவார். சந்நிதியில் நைவேத் தியம் வைத்துவிட்டு, தேவி அமுதருந்துவதைக் காண்ப வர்போல அவளை உற்றுநோக்கிப் பார்த்த வண்ணமா யிருப்பார். அஸ்தமன வேளைகளில் ஆரதி எடுக்கும் போது மெய்ம்மறந்து தீபத்தைச் சுற்றிக்கொண்டே யிருப்பார். இவையெல்லாம் பார்த்தவர்கள் இவரைப்

ஒருநாள் தாயின் திருப்பணி யாற்றிக்கொண்டிருக் கையில் கதாதரருக்கு அடங்காத் துயரம் வந்துவிட்டது. எத்தனையோ ஓலமிட்டும் அம்பிகையின் மனமிளக

வில்லை. அவளது அருளைப் பெருது, அவள் தாளிணை யைக் காணுது வாழ்தலினும் இறந்தொழிதல் மேல் என்றெண்ணி அவர் அங்கு வைத்திருந்த ஒரு வாளை எடுக்கத் தாவினுர். அந்த நேரத்தில் பவதாரணியாகிய அன்னை அருள் சுரந்து அவர்முன் பிரசன்னமாக மனமு வந்தாள். முதன் முதலாகப் பராசக்தியின் தரிசனம் பெற்ற கதாதரர் தம்மையும் உலகையும் மறந்து மூர்ச்சித்துக் கீழே விழுந்தார். அவரைச் சுற்றிலு மிருந்த பொருள்கள் யாவும் ஒரு நொடியில் மங்கி மறைந்து போயின. எல்லையில்லா ஜோதி வெள்ளம் பாய்ந்து பரந்து அலைமேல் அலையெறிந்து வந்து அவ ரைச் சூழ்ந்து மூழ்கடித்தது. அந் நிலையில் சித் சொரூபிணியும் ஆனந்த வடிவினளுமாகிய அன்னையின் திருவுருவம் அவரது உள்ளத்தினுள்ளே திகழ்ந்து தெவிட்டாத பேரின்பம் ஊட்டியது. பெறுதற்கரிய இப்பரவச நிலையில் அவர் இரண்டு நாள் கிடந்துவிட்டு, "அம்மா! அம்மா!" என்று ஏங்கி யழைத்துக் கொண்டே புறவுணர்ச்சி பெற்றெழுந்தார்.

ஒருமுறை கடவுள் காட்சி கண்டு பேரின்பம் நுகர்ந்தவர் வேறு இன்பங்களை விரும்பார். தீயின் ஒளியைக் காணும் வண்டு தன்னை மறந்து தீயினுட் செல்ல முயலுதல் போல, அவரும் அழியாப் பேரொளி யில் தோய நாடுவர். அதன் பெருமை யறிந்த கதாதரரும் இந்நிலை எய்தினுர். ஒரு தடவை காட்சி கொடுத்து ஆசை யூட்டிவிட்டு அன்னை ஒளிந்துகொண்டாளே யென்று அவர் கதறி யழுவார். "கருணைநிதியே! என் தாயே! நான் உன்னைப் பிரிந்து உயிர் வாழேன், நின்னை யல்லாது நான் வேண்டுவது இத்தரணியில் யாதுமில்லை" என்று நெக்குருகி அழுது அழைத்த வண்ணமாயிருப் பார். ஜகன் மாதாவை எப்போதேனும் சற்று நேரம் மறந்திருந்துவிட்டால் தம் உள்ளம் கசக்கிப் பிழியப் பட்டாற் போலப் பரிதவிப்பார். "ஏனையவை யனைத் தையும் உதறி நீத்துவிட்டு, ஒருமை மனத்துடன் இடை

யருது இறைவனடி வேண்டுபவர்க்கே அவன் காட்சி தருவான்" என்றல்லவோ மறைமொழி முரசறைகிறது? தாயைப் பிரிந்திருக்க ஆற்ருது, விழிநீர் ஆருகப் பெருக்கிக் கசிந்துருகிய பிள்ளையாரின் விண்ணப்பத்துக்கு இரங்கி, அகிலாண்ட நாயகி அவரோடு கொஞ்சிக் குலாவி விளையாட வந்தாள்.

இதன் பிறகு கதாதரர் இவ்வுலகில் வாழ்ந்திருந்தாலும் அவரது எண்ணங்கள் வேறு ஏதோ உலகில் புதைந்து கிடந்தன. இக்காலத்தில் இவரது மனோ நிலை நினைவு, கனவு, உறக்கம் எனும் இம்மூன்று அவஸ்தைகளுடன் பொருந்தியதன்று. ஒரு வேளை இது துரியம் என்னும் அவஸ்தையாயிருக்காலம். ஒருவரும் அறியாத மொழிகளில் அவர் யாருடனேயோ பேசிக்கொண்டிருப்பார்; சிரிப்பார்; அல்லது நிஷ்டையில் அமர்ந்து கட்டை போலக் கிடப்பார். தம்மினும் வேருன ஏதோ ஒரு சக்தியினுல் ஆட்டுவிக்கப்படுவார்போல் அவர் காணப்பட்டார். அவருடைய பாவனைகள் எல்லாம் அவ்வாறிருந்தன. அவர் தியானத்தில் அமரும்போதெல்லாம், ஒருவன் வீட்டின் கதவுகளை ஒன்றன்பின் ஒன்ருக மூடித் தாளிட்டுக் கொண்டு உள்ளே பிரவேசித்தாற் போல், இவரது கணுக்களையும் புலன்களையும் கால் முதல் தலைவரையில் பூட்டிவிட்டு, உடற்கூறுகளையெல்லாம் கடந்து யாரோ ஒருவர் இவரை உள்ளழைத்துச் செல்வதாகத் தோன்றும். மறுபடியும் அந்த சக்தியானது சிறிது சிறிதாக வெளிவந்து முடியிலிருந்து அடிவரையில் கணுக்களைத் திறந்து விட்டாலொழிய இவரால் நிஷ்டையிலிருந்து எழுந்திருக்க முடியாது. அவரது மனக் கண்ணுக்கு மட்டுமன்றி ஊனக்கண்ணுக்குங்கூட எங்கெங்கும் பேரொளி மயமாகக் காணப்பட்டது. உருக்கிய வெள்ளி போன்ற ஒலி அலைகளால் தாம் சூழப்பட்டிருந்ததை அவர் உணர்ந்து அன்னையிடத்து "இவையாவும் என் நன்மைக்கோ, தீமைக்கோ அறியேன். நின்னைச் சரண் புகுந்த என்னை ஆதரித்தல்

நின் கடமை. நீ ஆட்டுவித்த விதம் நான் ஆடுகிறேன். நான், எனது என்பனவெல்லாம் நின்பால் மூழ்கிப் போக அருள்வாய்" என்று பிரார்த்திப்பார்.

இவர் தேவியை ஆராதிக்கும் முறைகள் வரவர இன்னும் விபரீதமாகிவிட்டன. புஷ்பம், வில்வம், துளசி ஆகியவற்றால் முதலில் தமது பாதம் உள்பட உடல் முழுதும் தீண்டிவிட்டுப் பிறகு அம்மனுக்குச் சாத்துவார். தமது கண்களும் நெஞ்சும் இரத்தம் சுரந்து சிவந்திருக்க, கள்ளுண்டவனைப் போலத் தட்டுத் தடுமாறி தேவியின் அருகிற்போய் அவளுடைய முகவாய்க் கட்டையை அன்புடன் தடவிக்கொண்டு பாடுவார்; ஆடுவார்; பேசுவார்; சிரிப்பார்; கேலி செய்வார். அன்னையின் சேலையின் தலைப்பை ஒரு கரத்தால் பற்றிக்கொண்டு செல்வப்பிள்ளை போலச் சுற்றியோடி விளையாடுவார். நைவேத்தியத்தைக் கையிலெடுத்துக்கொண்டு " அம்மா! சாப்பிடு, சாப்பிடு" என்று ஊட்டுவார். நானும் சாப்பிடுகிறதா ?......ஆகட்டும், சாப்பிடுகிறேன்" என்று தாமும் கொஞ்சம் வாயிற் போட்டுக் கொள்வார். " இனி நீ சாப்பிடு" என்று மறுபடியும் அன்னையின் வாயில் ஊட்டுவார். இரவில் தேவியைப் பள்ளியறைக்குச் சயனிக்க அனுப்பும்போது, " அம்மா! நானுமா படுத்துக்கொள்ளவேண்டும்! அப்படியே ஆகட்டும்; இதோ படுத்துக் கொள்கிறேன்" என்று தாயுடன் சிறிது நேரம் வெள்ளித் திருமஞ்சத்தில் படுத்திருப்பார். இவற்றை யெல்லாம் கவனித்து வந்த ஆலயக் காரியக்காரர்கள், 'இந்த முழுப் பைத்தியக்காரனைக் கோயிலினின்று உடனே துரத்திவிட வேண்டும்' என்று இராணி ராசமணி யம்மைக்கு எழுதித் தெரிவித்தார்கள். கதாதர சட்டர்ஜியின்பால் பேரபிமானம் கொண்டிருந்த மதுரா நாத விஸ்வாஸ் தாமே நேரிற் பார்த்து உண்மை யறியவேண்டுமென்று ஒரு நாள் திடீரென்று கோயிலுக்கு வந்து ஒளிந்திருந்துகொண்டு சந்நிதியில் நடந்தவைகளையெல்லாம் உற்று நோக்கினார்.

இவ் வர்ச்சகர் சாமான்யப் பித்தரல்லரென்றும் இவர் வைதிக பக்தியைக் கடந்து பரபக்தியில் தோய்ந்துள்ளா ரென்றும் இவரது பிரேம பக்திக்கு எளியவளாய் தேவி யும் இவருக்குப் பிரசன்னமாயுள்ளாளென்றும், ஆதலின் தம் மாமியார் திருக்கோயில் கட்டுவித்ததின் நோக்கம் பூரணமாக நிறைவேறிற்றென்றும் எண்ணிய மதுரா நாதர் அடங்கா மகிழ்ச்சி கொண்டார்.

இன்னும் வேறு விதமான சாதனங்களையும் கடைப் பிடித்துப் பரம் பொருளின் பலவகைத் தோற்றங்களை யும் ஸ்ரீராமகிருஷ்ணர் காணலுற்றார். பக்தியில் ஐந்து வகை யுண்டு. இறைவன் ஒருவனே மெய்ப்பொருள் என் னும் ஞானத்தினின்று உதிப்பது சாந்த பக்தி யெனப் படும். நாரதர் போன்ற முனிவர்கள் இவ்வித பக்தி பூண் டொழுகினர். ஆண்டான் அடிமை என்னும் பாவனை யுடையது தாசிய பக்தி. ஆஞ்சநேயரும் அப்பர் சுவாமி களும் இத்தகைய பக்தி படைத்திருந்தனர். கடவுளைத் தோழனைகப்பாவிப்பதற்கு ஸக்கிய பாவனை என்று பெயர். பிருந்தாவன கோபாலர்களும் கோபிகளும், சைவ சமய குரவருள் சுந்தரமூர்த்தி நாயனாரும் இவ்வாறு இறை வனைத் தங்கள் தோழனைக் கருதிப் போற்றினார்கள். வாத்ஸல்யபாவனை யென்பது கடவுளைத் தம் குழந்தை யாகப் பாராட்டுதல். பால ராமனையும், பால கிருஷ்ண னனையும் பெற்றோர்கள் பாராட்டினது இவ்வித பக்திக் குச் சான்றாகும். தலைவனைத் தலைவி காதலிப்பது போல இறைவனை நேசிப்பதற்கு மதுரபாவனை யென்று பெயர். இம் முறையிலே இராதை கிருஷ்ணனையும், மாணிக்க வாசகர் சிவபெருமானையும் பக்திசெய்து அடைந்தனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்த உபாயங்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கையாண்டு இறைவனுடைய எல்லா அம்சங்களிலும் ஈடுபட்டு ஆனந்தித்தார்.

ஸ்ரீ ராமபிரானை ஆஞ்சநேயர் சேவித்ததுபோல் இவரும் சேவிக்க விரும்பி முதலில் ஆஞ்சநேயருடைய

குணாதிசயங்களைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தார். அதன் பயனாகத் தம்மை மறந்து ஆஞ்சநேயர் மயமானார். அப்போது நடையுடை பாவனைகளெல்லாம் அநுமந்தருடையவை போலவே ஆகிவிட்டன. பெரும்பாலும் மரக்கிளைகளின் மீது உட்கார்ந்துகொண்டும், காய் கனிகளைத் தோலுரியாமல் தின்றுகொண்டும் சதா இராமநாமத்தை உச்சரித்தும் வந்தார். இக்காலத்தில் ஒருநாள் திடீரென்று அவருக்கு ஓர் அற்புதக் காட்சி சித்தித்தது. தக்ஷிணேசுவர ஆலயத்தில் பஞ்சவடி யென்று சொல்லப்படும் மரங்களின் கீழ் அவர் அமைதியாக அமர்ந்திருந்த போது ஒளி வீசிய திருமேனியுடன் மாட்சிமை தங்கிய மாதரசி ஒருத்தி தம்மை நோக்கி வந்ததைக் கண்கூடாகக் கண்டார். நான்கு கை, முக்கண் முதலிய பராசக்திக்குரிய சின்னங்கள் அவள்பால் காணப்படவில்லை. ஆனால் காண்பதற்கரிய மனோவமைதி, சகிப்பு, தயை, அன்பு முதலிய உயர்குணங்கள் அவளது திவ்விய முகத்தில் திகழாநின்றன. கருணையுடன் பார்த்த வண்ணமாய்த் தம்மை நோக்கி வந்த இப்பெண்மணி யாரோ வென்ற ஐயம் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு உண்டாகு முன்னர் வானரமொன்று குதித்தோடி அவளருகில் சென்று உட்கார்ந்தது. துன்பமே உருவெடுத்து வந்தவளும், தன் உடல், பொருள், ஆவியெல்லாம் இராம பிரானுக்கு உவந்தளித்தவளுமான சீதாபிராட்டியல்லவோ இவள் என்ற எண்ணம் உடனே அவரது உள்ளத்தில் உதித்தது. மனக்கிளர்ச்சி மேலோங்கப் பெற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர் "அம்மா!" வென்று அலறிக்கொண்டு பிராட்டியின் பாதங்களில் விழப்போனார். ஆனால் அப்படி விழு முன்னமே, அன்னை ஜானகி அருள் நோக்குடன் அவரைப் பார்த்து அவரது உடலில் கலந்து ஐக்கியமாகிவிட்டாள். பரவசமடைந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் மூர்ச்சித்தவர் போலக் கீழே வீழ்ந்தார்.

இராணி ராசமணி யம்மையார் ஒருநாள் கங்கையில் நீராடிவிட்டு ஜகன்மாதா பவதாரிணியை வணங்குதற்

பொருட்டு சந்நிதியிற் போய் அமர்ந்திருந்தார். கோயில் எஜமானியும் வயதில் மூத்தவருமான அம்மாதரசியின் வேண்டுதலுக் கிணங்கி ஸ்ரீ ராமகிருஷ்ணர் தேவியைப் போற்றிச் சில பாடல்கள் உருக்கமாகப் பாடிக்கொண் டிருந்தார். அப்பாக்களைக் கேட்டு மனமொடுங்கி தேவியை வழிபட்டுக் கொண்டிருந்த இராசமணிக்கு இடையில் தம் ஜமீன் சம்பந்தமான ஏதோ ஒரு வியாஜ்யத்தைப் பற்றிய எண்ணம் வந்தது. "இவ்விடத்திலுங் கூடவா விவகாரம்!" என்று கடிந்து ஜமீன்தாரிணியின் உடலின் மீது இருமுறை யறைந்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இந்த அடாத செய்கை சேவகர்களுக்குப் பெருந் திகில் விளைவித்தது. அர்ச்சகர் மீது பாய்தற் பொருட்டுப் பதை பதைத்துக் கொண்டு இராணியாரின் ஆக்ஞையை எதிர் பார்த்து நின்றனர் பணியாட்கள்; ஆனால் தம் குற்றம் அறிந்த இராசமணி யம்மையார், அகிலாண்ட நாயகியே இப்பெரியார் மூலம் தமக்குப் புத்தி புகட்டினாள் என் றெண்ணி அடங்கியிருந்தது மல்லாமல் சேவகர்களது அறிவின்மையைக் கடிந்தார்.

மதுராநாத விஸ்வாஸ் ஒருநாள் பல விஷயங்களைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் சம்பாஷித்துக் கொண் டிருந்தபோது, "இயற்கை நியதியை மாற்றக் கடவுளா லுங்கூட முடியாது, உதாரணமாக, செம் மலர்ச் செடியில் வெள்ளை மலர் பூக்கும்படி செய்யப் படைத்தவனாலும் இயலுமா?" என்றார். "என்ன அப்படிச் சொல்லுகிறீர்? தான் விதித்த சட்ட திட்டங்களை விலக்கவும், மாற்றவும் அவனால் இயலும். எல்லாம் வல்ல இறைவனால் ஆகாதது ஒன்றுண்டோ!" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இம் மறுமொழி மதுராநாதருக்குத் திருப்தியளிக்கவில்லை. எனினும் ஒருநாட் காலையில் தூவெண் மலரொன்றும், நல்ல சிவப்பு மலரொன்றும் ஒரே காம்பில் இணையாகப் பூத்திருந்த செம்பருத்திக் கிளையொன்றை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கொண்டுவந்து காட்டினபோது மதுரா நாதர் தாம் தோற்றுப்போனதாக ஏற்றுக்

கொண்டது மல்லாமல் இறைவனின் ஆற்றலைப் பற்றிய தம் பிழைபட்ட எண்ணத்தையும் மாற்றிக் கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் நெருங்கிப் பழகப்பழக மதுரா நாதருக்கு அவர் மீது விசுவாசம் அதிகரித்து வந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தேக சௌக்கியம் சிறிது சிறிதாகக் குலைந்து வந்ததைக் கவனித்த மதுராநாதரும், இல்வாழ்வோர் வேறு சிலரும் அவர் பிரம்மசரிய விரதத் தினின்று சிறிதேனும் பிறழாதிருந்ததே அக்குலைவுக்குக் காரணமென்று கருதினார்கள். இவ்விதப் புன்மைக் கருத்து பலவிடங்களில் நிலவி வருகிற தன்றோ? எனி னும் தங்களுடைய அபிப்பிராயத்தை அவரிடம் தெரிவித் தால் அவர் கடிந்து மறுப்பாரென்று மதுராநாதர் நன் கறிந்திருந்தார். ஆதலால் அவருக்குத் தெரியாமலே அவரைச் சிற்றின்பத்தில் ஆழ்த்துவதற்கான சூழ்ச்சி யொன்று அவர் செய்தார். பராசக்தியின் செல்வனை மயக்குதற் பொருட்டுக் காமக் கிழத்திகள் இருவர் ஒரு நாள் அவரது அறைக்குள் ஏவப்பட்டனர். ஆனால் அவர்களைப் பார்த்தவுடனே "அம்மா!" வென்றழைத் துக்கொண்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜகன் மாதாவிடம் சரண் புகுந்தார். "அம்மா!" வென்ற மொழி கேட்ட தும் வேசிகளிருவரும் வெட்கி, விசனித்து, வெளியே போயினர். இன்னு மொருமுறை பார்ப்போ மென்று எண்ணிய மதுராநாதர் சில விலைமாதர்களுடன் சதியா லோசனை செய்துவிட்டு, ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கல்கத்தாவுக்குச் சவாரி போய் வரலாமென்று அழைத் துச் சென்றார். ஓரிடத்தில் வண்டியை நிறுத்தி அங் கிருந்த ஒரு வீட்டினுள் அவரை விட்டுவிட்டு மதுராநாதர் மறுபடியும் வண்டியிற்போய் உட்கார்ந்து கொண்டார். அங்கிருந்த அழகின் மிக்க இளம் பெண்களைக் கண்டதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தேவியின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு புறவுணர்ச்சி யிழந்த ஒரு பாலகனைப் போல் ஆகிவிட்டார். இஃது அப்பெண்கள்பால் பெரும் மாறுதல் விளைவித்தது. மகானிடத்து மதியீனமாய் நடந்துகொண் டதற்காக அவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்

கள். சிறிது நேரத்திற்குள் அங்கு வந்த மதுராநாதர் நிகழ்ந்ததை யறிந்து வியந்து, இவர்தான் உண்மையான ஜிதேந்திரியர் (புலன்களை வென்றவர்) என்றெண்ணி அதிவேகமாய் அவரைத் திருப்பி யழைத்துச் சென்றார். ஆனால் அவர் வெளியேகுவதற்கு முன் அவர் செய்த தகாத காரியத்துக்காக அப் பொதுமடந்தையர் அவர் மீது சொரிந்த இகழ்ச்சி யுரைகளைக் கேட்டு அவர் நாணுற நேர்ந்தது. இச்சம்பவம் காரணமாக ஸ்ரீ ராமகிருஷ்ணர்பால் மதுராநாதரது மரியாதை பன் மடங்கு அதிகரித்தது என்று சொல்ல வேண்டிய தில்லை யன்றோ?

## நான்காம் அத்தியாயம்

## விவாகமும் வைராக்கியமும்

ஏற்கனவே தம் முதல் மகன் இராமகுமாரனது பிரிவாற்றாமையினால் வருந்திக் கொண்டிருந்த சந்திரமணி தேவியார், தமது இளைய மகன் கதாதரனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்ற செய்தி செவி யுற்றபோது, ஆறாத் துயரத்தில் அழுந்தினார். தமது அருமைப்புதல்வன் உலகத் தொழில்களை விடுத்து நிர்வாணமாக அடிக்கடி நிஷ்டையில் அமர்ந்து காலங் கழிக்கிறானென்னும் எண்ணம் அப்பெண்மணியை உருக்கி வாட்டியது. கிராம வாசத்தினாலும் தமது அன்பார்ந்த பராமரிப்பினாலும் மகன் சீர்படக்கூடுமென்று எண்ணிய தேவியார், கதாதரர் கமார்ப்புகூருக்கு வரவேண்டுமென்று எழுதி வேண்டினார். தாயின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீராமகிருஷ்ணரும் அவ்விதமே புறப்பட்டுச் சென்றார். அப்போது அவருக்குப் பிராயம் இருபத்திரண்டு. இளம்பருவத்திலிருந்த குதூகலமும் வேடிக்கை விநோதங்களில் பற்றும்

கிராம வாசிகள் இப்போது இவர்மாட்டுக் கண்டார் களில்லை. திடீரென்று நினைத்துக்கொண்டு தேவியை வேண்டி அழுவார், அல்லது தியானம் செய்யும் பொருட்டு மயானக்கரைக்கு ஓடிவிடுவார். இவற்றிற்கெல்லாம் காரணம் பைத்தியமென்றும், வியாதியென்றும், பேய் பிசாசின் சேஷ்டை என்றும் ஜனங்கள் பலவிதமாக அபிப்பிராயப்பட்டார்கள். அவ்வவைகளுக்கேற்ற சிகிச்சைகளையும் கையாண்டு பார்த்தார்கள். எப்படியாவது லௌகிக வாழ்க்கைக்கு இவரை இழுத்துவிட்டால் மட்டுமே இவர் வழிக்கு வருவாரென்று கடைசியாகத் தாயாரும் இவரது இரண்டாவது தமயனார் இராமேசுவரரும் தீர்மானித்தார்கள். விவாகம் செய்து வைத்துவிட்டால் குடும்ப காரியங்களைக் கவனிக்கும் பொருட்டு இவர் ஒழுங்காய் விடுவார் என்றெண்ணிப் பெண் தேடினார்கள். இவ் வெண்ணம் முன்னமே தோன்றாமற் போனதுபற்றி வருந்தினார்கள். ஆனால் எவ்வளவோ தேடியும் இவருக்கேற்ற மணப் பெண் அகப்படவில்லை. இச் செய்தி ஸ்ரீ ராமகிருஷ்ணர் காதுக்கு எட்டியபோது அவர் "ஏன் இங்குமங்கும் தேடியலைகிறீர்கள்? ஜெயராம்பாடியிலே இராமச்சந்திர முக்கர்ஜி வீட்டிலே எனக்கென்று ஏற்பட்ட பெண் இருக்கிறாள், அங்கே போங்கள்" என்றார்.

விவாகம் என்றால் வெறுத்து வெகுளுவாரோ வென்று அஞ்சியிருந்த பெற்றோர்களுக்கு அவரது கூற்று வியப்பூட்டியது. இவர் கூறியபடியே ஜெயராம்பாடியில் பெண்ணும் கிட்டினாள். தங்கள் வீடுகளில் சுபகாரியங்கள் ஏதாவது வந்துவிட்டால் சிறுபிள்ளைகள் களிகூர்வது போல ஸ்ரீ ராமகிருஷ்ணரும் குதூகலமடைந்திருந்தார். பின்னர் ஒரு சுபதினத்தில் கதாதர சட்டர்ஜிக்கும், இராமச்சந்திர முக்கர்ஜியின் குமாரத்தி சாரதா தேவிக்கும் வைதிக விதிப்படி விவாகம் நிறைவேறியது. இது குறித்துச் சந்திரமணி தேவியார் அளவிலா மகிழ்ச்சி யடைந்தார். விவாகம் முடிந்தபின், இன்னும் புத்தியறியாத இளம் பெண்ணாயிருந்த மண மகளைத் தம் தாயாரிடமே

விட்டுவிட்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் திரும்பவும் தக்ஷிணேசுவரம் சென்றார்.

அங்கு மீண்டும் தேவியை வழிபடுவதற்கு அமர்ந்தவுடன் முன்போலவே தெய்விகப் பித்து அவரைப் பிடித்துக்கொண்டது. தமது தள்ளாத தாயையும் பொருள் சம்பாத்தியத்தில் தொல்லையுறும் தமயனையும் இளம் மனையாளையும் இப்போது ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறவே மறந்துவிட்டார். உறக்கமின்றி அல்லும் பகலும் நிஷ்டை புரிதலும், இரத்தம் சுரந்து நெஞ்சு சிவத்தலும், புளகங் கொண்ட திருமேனி தகதக வென்று எரிதலும் பழைய படி திரும்பி விட்டன. இவை யாவும் யோக சாதனத்தின் அறிகுறிகளென்று ஒரே ஒரு வைத்தியருக்கு மட்டும் தெரிய வந்தது; ஏனையோர் இது ஏதோ ஒரு தீராத நோயென்றே தீர்மானித்தார்கள், உறக்கம், கனவு, நினைவு என்பவை போல உயர்தர மற்றை அவஸ்தைகள் பல உண்டு. இவை யாவும் பாவனைகளென்றும், ஞான பூமிகளென்றும் கூறப்படுகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்த பாவனைகளை யெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அனுபவித்து வந்தார். பஞ்ச வடியில் நிஷ்டை புரிகையில் மரக் கட்டைபோலக் கிடப்பார். அப்போது இவர்மீது குருவிகள் வந்து உட்கார்வதும், பாம்புகள் ஊர்ந்து செல்வதும் உண்டு. ஆறு வருஷ காலம் தாம் கண்மூடி உறங்கினதே கிடையாதென்று அவரே சொல்லியிருக்கிறார். உணர்ச்சி பெற்ற வேளைகளில் கண்களில் விரலை வைத்தாலுங்கூட இவரால் சிமிட்ட முடியாது போய்விட்டது. இதனால் சில சமயங்களில் இவர் அச்சமுற்றாலும் பின்னர் 'தேவியின் திருவுளம்படியாகுக' என்று தேறுதல் பெறுவார்.

அல்லும் பகலும் இவரது கண்ணெதிரே தோன்றிய தெய்விகக் காட்சிகள் எண்ணிறந்தவை. தமது அனுபவம் ஒன்றைப்பற்றி அவர் தாமே செல்லியதாவது:—
"நான் தியானத்தில் அமரும்போதெல்லாம், வடிவத்தில்

முற்றிலும் என்போன்ற ஒரு சந்நியாசி, கையில் திரிசூலம் தாங்கிக்கொண்டு. என் தேகத்தினின்று வெளிவருவார். ஒருமை மனதுடன் இவ்விதமாகத் தியானம் செய்யென்று அவர் எனக்குக் காட்டுவார்; அவ்வாறு செய்யாவிட்டால் திரிசூலத்தால் குத்தி விடுவேனென்றும் பயமுறுத்துவார். ஒருமுறை என் தேகத்தினின்று கன்னங்கறேலென்ற தமோமய பாப புருஷன் ஒருவன் வெளிப்பட்டான். இந்தச் சந்நியாசி அவனை அப்போதே குத்திக்கொன்றுவிட்டார். அதன் பிறகுதான் 'நான் புனிதன்' என்ற உணர்ச்சி என்னிடத்து நீங்காது நிலை பெற்றது. எனக்கிருந்த ஐயங்களையெல்லாம் இந்த சந்நியாசி போக்கி வந்தார். நான் தியானத்தில் அமர்ந்ததும் வெளிவரும் இவர் மீண்டும் என் தேகத்தினுள் ஐக்கியமான பிறகுதான் நான் பிறவுணர்ச்சி பெறுவேன்." சாதனத்தில் தூய்மையடைந்த மனமே குருவாக எழுந்தருளிச் சாதகனுக்கு நல்லனவும் தீயனவும் காட்டா நிற்குமென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் மொழிந்ததற்கும், அவரது அனுபவத்துக்கும் உள்ள ஒற்றுமை கவனிக்கத் தக்கது.

கடவுள் நாட்டத்துக்கு ஊறு விளைத்து மனிதனை மயக்கும் ஆசைகளில் பொன்னாசை ஒன்று. இதைத் தமது உள்ளத்தினின்று அடியோடு போக்கிவிட இவர் ஒரு சாதனத்தைக் கைக்கொண்டார். அதாவது ஒரு கரத்தில் கொஞ்சம் மண்ணையும் மற்றொரு கரத்தில் சில நாணயங்களையும் எடுத்துக்கொண்டு தமது மனத்திற்குப் பின்வருமாறு புத்தி புகட்டினார்:—"மனமே இந்தக் காசுக்காக நீ உறும் கவலை யெத்தனை! கஷ்டம் எத்தனை! இது கேவலம் சில அற்ப சுகங்களைத்தானே தரமுடியும்? கடவுள் வழிபாட்டுக்குத் தடையாயிருக்கும் இது வெறும் மண்ணே. சீ! மனமே! நீ இதை ஒருபோதும் நாடாதே!" இவ்வாறு சொல்லிக்கொண்டு இருகரங்களிலுமிருந்தவைகளையும் இவர் கங்கைக்குள் எறிந்துவிட்டார். இந்த சாதனத்திற்குப் பிறகு நாணயங்கள் எதையுமே இவரால் தீண்ட முடியாது போய்விட்டது. பஞ்ச

பூத விகாரத்தில் விளைந்துள்ள வஸ்துக்களுள் வேற்றுமையும் உயர்வு தாழ்வும் பாராட்டாத மனேநிலை எய்தும் பொருட்டுக் கசுமலம் மிக நிறைந்துள்ள இடங்களைப் பெருக்கிச் சுத்தம் பண்ணுவார். நறுமணம் கமழும் சந்தனத்துக்கும் துர்நாற்றம் வீசும் மலத்துக்குமிடையே பேதம் காணுவண்ணம் இரண்டையும் ஒரே பாங்குடன் தீண்டுவார். வேற்றுமைகளுக்கெல்லாம் மூலாதாரமாகிய பொல்லாத மனத்தை இவர் இவ்வாறெல்லாம் பண்படுத்தி வந்தார்.

தக்ஷிணேசுவரத்துக் காளி கோயிலின் மேற்கு வாயிலில் பன்னிரண்டு சிறு சிவாலயங்களிருக்கின்றன. இங்கு மஹிம்ன ஸ்தோத்திரம் பாடிச் சிவனை வழிபடுவது ஸ்ரீ ராமகிருஷ்ணர் வழக்கம். சிவபெருமானுடைய மஹிமைகள் யாவும் இந்த ஸ்தோத்திரங்களில் அடங்கியிருக்கின்றன. ஒரு நாள் பரவச நிலையடைந்து பாடிக்கொண்டிருக்கையில் பெருமானின் பெருமைகளை அநுபூதி வாயிலாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறிந்து அளவிலா மகிழ்ச்சி கொண்டார். பெருமானது மகிமை முழுதும் எடுத்துரைக்க முடியாமல் அடிக்கடி இவரது நா குளறியது. கடைசியாக, " எல்லையில்லா நின்னை என்னென்று உரைப்பேன் !" என்று சொல்லிக்கொண்டு சமாதியில் மூழ்கிவிட்டார். இதன் பிறகு ஒருநாள் இதுபோலவே பரவசமடைந்து சிவாலயங்களுக்குமுன் இங்குமங்கும் உலாவிக்கொண்டிருந்தார். அப்போது ஆலயத்துக்கு வந்திருந்த மதுராநாதர் கூப்பிய கையுடன் நெடுநேரம் தூரத்தில் நின்று பார்த்துவிட்டு ஓடிவந்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாளிணையில் வீழ்ந்து தேம்பித் தேம்பி அழுதார். ஆலய நிர்வாகியாகிய அவர் அவ்வாறு செய்தல் தகுதியன்றென ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடிந்தபோது மதுராநாதர் "பிரபு ! தாங்கள் இங்குமங்கும் உலாவியபோது ஒரு முறை சிவமாகவும் மற்றொரு முறை சக்தியாகவும் காணப்பட்டீர். இக்காட்சி வெறும் பிராந்தியோ என்று கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தேன். ஆனல் தாங்கள் சிவசக்தி

யாகவே திகழ்ந்தீர் " என்றார். இதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் " நானொன்றும் அறியேன் " என்று வழக்கம்போல் விடையிறுத்தார்.

இராணி ராசமணி யம்மையார் காலஞ் சென்ற பிறகு கோயில் பொறுப்பு யாவும் மதுராநாதர் மீதே சுமந்தது. அப்போது அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு எவ்விதக் கைங்கரியமும் செய்ய ஆயத்தமா யிருந்தார். தாம் வழிபடும் தெய்வமே திருவுருத் தாங்கி வந்ததெனக் கருதி அவரைப் பாராட்டினார். அவரது சம்ரக்ஷணைக்காக ஒரு பெரிய நன்செய் நிலத்தை அவர் பெயருக்கு மானியமாக விட விரும்பினார். இதைக் கேள்வியுற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர், " என்ன ? என்னை சம்சாரியாக்கவா துணிந்துள்ளீர் ?" என்று கடிந்த பின்பே அவ்வாறு செய்யாது நின்றார். இராதாகோவிந்தர் கோயிலிலிருந்து ஓரிரவு பல விலையுயர்ந்த ஆபரணங்கள் களவு போயின. அதையறிந்த மதுராநாதர், " ஆ! என்னே உமது பொருளைப் பாதுகாக்கவும் உம்மால் முடியாது போய்விட்டதா ? " என்று திருமாலிடம் குறைகூறினார். இந்தச் செய்தி ஸ்ரீ ராமகிருஷ்ணர் காதுக்கு எட்டியபோது " என்ன அறியாதவர்போல் பிதற்றுகிறீர் ! மின்னுகின்ற உலோகம் உம் போன்றவர்களுக்குப் பெரியதாய் இருக்கலாம் ! லக்ஷ்மி தேவியே அடிவணங்கும் பெருமானுக்கு இந்த மண்ணும் பொன்னும் பொருளாகுமோ?" என்று கடிந்துரைத்தார்.

மதுராநாதர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் கொண்டிருந்த பயபக்தி, அவரது குடும்பப் புரோகிதராகிய சந்திர ஹலதாரருக்குப் பொறாமை யூட்டியது. தாம் தாராளமாகப் பெற்றுவந்த தக்ஷிணைக்கும் வெகுமானத்துக்கும் இடைஞ்சலாக இவர் ஒருவர் வந்துவிட்டாரே என்று சில நாளாக ஹலதாரருக்கு உள்ளம் கொதித்துக் கொண்டிருந்தது. ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் மதுராநாதர் வீட்டின் ஓரறையில் தனியாய் இருந்தபோது, தருணம் பார்த்திருந்த புரோகிதர் உள்ளே நுழைந்து சுற்றிலும் பார்த்து

விட்டு, "ஓய், மதுராநாதரை வசப்படுத்த என்ன தந்திரம் செய்தீர்? உள்ளதைச் சொல்லும்" என்று ஓரிரண்டு முறை கேட்டார். ஆனால் நிஷ்டையிலிருந்து அப்போது தான் புறவுணர்ச்சி பெற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணரால் ஒன்றும் பேச முடியவில்லை. "மௌனம் கலகம் நாஸ்தி" என்பது பழமொழி. ஆனால் இங்கு அவ்வாறாகவில்லை. "திருட்டுப் பயல் திகைக்கிறான்" என்றெண்ணினார் பொறாமைக்கார புரோகிதர். இதுவரையில் புகைந்து கொண்டிருந்த அவரது சினம் இப்போது மூண்டு எரியலாயிற்று. தமது சினந்தீர ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் புரட்டிப் புரட்டி மூன்று நான்கு தடவை காலால் உதைத்துத் தள்ளிவிட்டு ஊலதாரர் வீரர்போல வெளியேகிவிட்டார். அந்த அறியாத பிராமணர்மீது பச்சாத்தாபம் கொண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர் நடந்தவற்றை எவரிடமும் சொல்லவில்லை. நெடுநாளைக்குப் பிறகு துர்நடத்தையை முன்னிட்டு ஊலதாரர் துரத்தப்பட்ட பின் ஒரு முறை அவரைப்பற்றி மதுராநாதருடன் பேசிக்கொண்டிருக்கையில் இந்த சம்பவத்தையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் குறிப்பிட்டார். 'ஆகா! அப்போதே எனக்குத் தெரிந்திருந்தால் அவன் தலை தெறித்திராதா!' என்று மதுராநாதர் அலறிப் பதறினார்.

## ஐந்தாம் அத்தியாயம்

## தாந்திரிக சாதனம்

ஒரு நாள் ஓர் ஓடம் ஊர்ந்து தக்ஷிணேஸ்வரம் வந்து சேர்ந்தது. அதில் நின்று பைரவி பிராம்மணி என்ற அம்மையார் ஒருவர் இறங்கினர். இவர் கல்வித் திறமையும் ஆத்மானுபவமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற சந்நியாசினி யாவர். இவ்வம்மையார் பெற்றிருந்த ஆதேசத்தின்படி தம்மிடத்திருந்து உபதேசம் பெறுவதற்குத் தகுதி வாய்ந்த மூன்ருவது மனிதரைத் தேடி ஈண்டு வந்து இறங்கினர். முன் பின் தமக்குத் தெரியாதவரும் அழகு வாய்ந்தவருமான அம்மாதரசியைத் தமதறைக்கு அழைத்து வரும்படி ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஹிருதயரை ஏவினர். சந்நியாசினியாயினும் பெண்பால் ஆதலின் அவரை இவ்வாறு அழைப்பது தகுமோவென்று ஹிருதயர் தயங்கியபோது, "என்னைப்பற்றிச் சொன்னல் போதும்; அவரே வருவார்" என்ருர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். அவ்வாறே ஹிருதயர் சென்றழைத்ததும் அவ்வம்மையார் விரைந்து வந்து ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்து, "மகனே, உனக்காக நான் எங்கெல்லாம் தேடுவது?" என்று கூறி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். நீண்ட காலப் பிரிவுக்குப் பிறகு சந்தித்த தாயும் சேயும்போல இருவரும் பேசத் தொடங்கினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது அனுபவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லிவிட்டு அவைகளைப்பற்றி அம்மையாரது அபிப்பிராயத்தை எதிர் பார்த்திருந்தார். வியப்புடன் செவி கொடுத்து வந்த பிராம்மணி, "பிள்ளாய், அறிவிலிகள் உன்னைப் பித்தனென்ருலென்ன? உனது மனே நிலைமைதான் நூலோர்களால் மஹாபாவனை*யெனப் படுவது" என்ருர்.

---

*மஹாபாவனை யென்பது உரோமம் சிலிர்த்தல், அங்கம் புளகித்தல், ஆனந்தக் கண்ணீர் மல்கல் முதலிய பத்தொன்பது குணக்குறிகளுடைய ஒருவிதப் பரவச நிலை. கௌரங்கதேவர், ராதை, ஆண்டாள், மாணிக்க வாசகர் முதலியோர் இவ்வுயர்நிலை அடைந்தவராவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் புதல்வரெனப் பாராட்டி வந்த பைரவியம்மைக்கு நாளேற ஏற அவரிடத்து அளவிலா அன்புண்டாயிற்று. தமது இஷ்ட மூர்த்தியாகிய இராமகுமாரனுக்கு நாள்தோறும் அமுது ஆக்கிப் படைத்து வழிபடுவது அவ்வம்மையின் வழக்கம். அவ் விதமே தக்ஷிணேசுவரத்தில் பஞ்சவடியினருகில் ஒரு நாள் வழக்கம்போல் அமுது படைத்துவிட்டு பிராம்மணி அம்மையார் தியானத்தில் அமர்ந்திருந்தார். அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ணர் திடீரென்று ஒருவிதப் பரவச நிலையடைந்து பிராம்மணியார் அமர்ந்திருந்த இடத்தை நோக்கிச் சென்று, அவர் இராகவனுக்கு நைவேத்தியமாக வைத்திருந்த அன்னத்தை எடுத்து அருந்திக்கொண்டிருந்தார். தியானத்திலிருந்த பைரவியார், இராகவன் எழுந்தருளி அமுது உண்டாற்போல் தரிசனங்கண்டு திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்த்தார். உடனே ஸ்ரீ ராமகிருஷ்ணரும் உணர்ச்சி பெற்றெழுந்து, "நான் மெய் மறந்து செய்த குற்றத்துக்காக என்னை மன்னியுங்கள். இவ்விதச் செய்கைகளுக்காகத்தான் ஜனங்கள் என்மீது குறை கூறுகிறார்கள். நான் என்ன செய்வேன்?" என்று இரங்கி வேண்டினர். "அப்பா, அமுது உண்டவன் நீயல்ல: உன்னுள்ளிருந்து உன்னை ஆட்டுவிக்கும் பரம்பொருளே. இவ் விவரம் நானிப்போது தியானத்தில் கண்டேன். யாரறிவார் உன் பெருமை!" என்று கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பொழிய அம்மையார் பகர்ந்து, மிகுந்திருந்த அன்னத்தைப் பிரசாதமென உட்கொண்டார்.

பிராம்மணி யம்மையார் தக்ஷிணேசுவரத்துக்கு வடக்கே சொற்ப தூரத்தில் ஒரு கிராமத்தில் வசித்துக் கொண்டு அடிக்கடி வந்து ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தெரிசித்துவிட்டுப் போவார். நல்ல பட்சணங்கள் செய்து கொண்டு வந்து அவருக்கு ஊட்டுவதில் அப்பெண் மணிக்குப் பிரிய மதிகம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜீவன் முக்தர் மட்டுமல்லர்; அவர் ஓர் அவதார புருஷரே

என்று அம்மையார் சாதித்து வந்தார். எந்தச் சபையி லும் தாம் இக்கூற்றைச் சாஸ்திர ரீதியாக நிரூபிக்க முடி யுமென்று அவர் பறைசாற்றினார். இவ்விஷயங் கேள்வி யுற்ற மதுராநாதருக்கு ஆச்சரியமும் ஊக்கமும் உண்டா யின. அவர் கூற்றை ஆராய்தற்பொருட்டு அக்காலத் தில் பிரசித்திபெற்றிருந்த பண்டிதர்களையும் பல சமயங் களைச் சேர்ந்த மேதாவிகளையும் அவர் வரவழைத்தார். வைஷ்ணவ சமயத்தைச் சேர்ந்த வைஷ்ணவ சரண், சாக்த சமயத்தைச் சேர்ந்த கௌரிகாந்ததர்க்க பூஷணர் முதலியோர் அவரது அழைப்புக் கிணங்கி வந்தனர்.

இப் பெரியோர்கள் அடங்கிய அவை யொன்று கூடித் தொடர்ச்சியாகச் சில தினங்கள் நடைபெற்று வந் தது. ஸ்ரீ ராமகிருஷ்ணரது அனுபவங்கள், குண வைப வம், பகவத் சம்பத்து இவைகளை யெல்லாம் பிராம்மணி பைரவி யம்மையார் தெளிவாக சாஸ்திரப் பிரமாணத் தோடு எடுத்துக் கூறிவிட்டு, இம்மஹிமைகள் யாவும் சாதாரண ஜீவன் முக்தன் மாட்டுக் காணப் படாவென்று சொல்லிய பிறகு, தம் கூற்றை யார் வேண்டுமானாலும் மறுக்கலாமென்றார். அங்கு வந்திருந்த நுண்ணறிவாளர் களும் இவர் மக்களினத்தையோ முனிவரினத்தையோ சேர்ந்தவரல்ல ரென்றும், இவரிடத்துத் தெய்வத் தன் மைக்குரிய அம்சங்கள் யாவும் பொலிகின்றனவென்றும் முடிவு கட்டினார்கள். அம் முடிவுக் கிணங்க ஸ்ரீராமகிருஷ் ணர் மாட்டு அப் பெரியோர்களின் பயபக்தியும் அதிக ரித்து வந்தது. இந்த ஆலோசனையில் சிறிதும் சிரத்தை யின்றி ஆங்குட்கார்ந்திருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் "என் னவோ சொல்லுங்கள்! நான் வெறும் பித்தனல்ல வென் கிறீர்களே, அதுவே போதும்" என்றார்.

முற்கூறிய மூன்று பண்டிதர்களுள் கௌரிகாந்த தர்க்க பூஷணர் பயின்று வந்த அரும்பெரும் தாந்திரிக சாதனங்களின் பயனாக அவர் அற்புதமான சித்திகள் சில பெற்றிருந்தார். தேவிக்குப் பூஜை செய்யும் போதெல்

லாம் இடதுகையில் சுமார் எண்பது ராத்தல் எடையுள்ள விறகுக் கட்டைகளை அடுக்கித் தீ மூட்டி வலது கையால் ஓமம் வளர்த்தல், இவர் பெற்றிருந்த சித்திகளுள் ஒன்று. ஸ்ரீராமகிருஷ்ணர் தாமே இதைப் பார்த்ததாகச் சொல்லியிருக்கிறார். இப்பண்டிதர் பெற்றிருந்த மற்றொரு சித்தியால் இவர் யாராலும் வாதில் வெல்ல முடியாதவராயிருந்தார். சபை நடுவே நுழையும்போது தேவியின் திருமந்திர மொன்றை அவர் உரக்க உச்சரிப்பார். அதைக் கேட்டதும் எதிரிகள் மருண்டுபோய் விடுவார்கள். பண்டிதரிடமோ ஒருவித சக்தி ஒளி வீசி எழும். இதுவே அவரது வெற்றிக்குக் காரணம். ஒரு சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்க்க வந்தபோது பண்டிதர் வழக்கம்போல உரக்கக் கூவினார். ஏதோ ஒரு சக்தியால் ஏவப்பட்டவராய் அதே மந்திரத்தை அதினும் உரக்க ஸ்ரீ ராமகிருஷ்ணர் உச்சரித்தார். உடனே பலமான போட்டி ஆரம்பமாயிற்று. ஒருவருக்குமேல் ஒருவர் சத்தமிட்டு அதட்டியது ஆலய முழுதும் கிடுகிடு வென்று நடுங்கச் செய்தது. திருடர்கள் திரண்டு வந்து தாக்கிக் கொள்ளையடிக்கின்றனரோ வென்று அஞ்சிய ஆலயக் காவலாளிகள் ஆங்காங்கிருந்து தடிகளைத் தூக்கிக் கொண்டு ஓடிவந்தார்கள். ஆனால் இவ்வளவு தடபுடலுக்குக் காரணம், தங்கள் பைத்தியக்கார அர்ச்சகருக்கும் ஒரு பண்டிதருக்குமிடையே தொண்டை வெடிக்கக் கூச்சலிடுதலில் வல்லவர் யார் என்று அறியும் பொருட்டுக் கிளம்பிய வெறும் விவாதமே என்று அறிந்ததும் காவலர் ஏமாந்து போயினர். கடைசியில் தர்க்க பூஷண பண்டிதர் தோல்வியடைந்தாரென்று சொல்ல வேண்டுவதில்லை. அதுமுதல் அந்தச் சித்தியும் அவரை விட்டகன்றது. அதன் பயனாக அவரது ஆணவம் தேய்ந்து, ஈசுவர சாக்ஷாத்காரத்துக்கு அப்பண்டிதர் பாத்திரரானார். ஆத்ம சாக்ஷாத்காரத்துக்கு இடையூறு விளைவிப்பவைகளில் அஷ்டமா சித்தியும் ஒன்று என்பதாம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் போதித்த போதெல்லாம் அந்தச் சம்பவத்தை உதாரணமாகக் குறிப்பிட்டு, அந்தப் பண்டிதரின் நன்மைக்காக

வேதான் தேவி தம்முட்புகுந்து அவ்விதம் செய்தா ளென்று சொல்லுவதுண்டு.

புத்தமத எழுச்சியால் மழுங்கிப் போயிருந்த பழைய வைதிக கர்மகாண்டம் ஞானகாண்டம் இரண்டையும் சமரசப்படுத்திய வழிபாட்டுமுறை தாந்திரிகமெனப் படும். இதில் அறுபத்து நான்கு அங்கங்களுண்டு. ஒவ் வோர் அங்கத்துக்கும் ஒவ்வொரு சாதனமும் உண்டு. பசுபாவம், வீரபாவம், திவ்விய பாவமென இச்சாதனங் கள் யாவும் மூன்று பிரிவினைகளாகப் பிரிக்கப்பட்டிருக்

காலாந்தரத்தில் இந்த சாக்த சாதனங்கள் ஒரு பான் மையாரால் கேவலம் சிற்றின்பத்திற்கெனவே துர்ப்பிர யோகம் செய்யப்பட்டு வருகையில், மற்றொரு பான்மை யார் இவைகள் சன்மார்க்கத்தின் பெயரால் சமூகத்துக் குக் கேடு விளைவித்து வரும் துன்மார்க்கங்களென்று வெறுத்து இவைகளை விலக்கி வந்துள்ளார்கள்.

ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக்கொண்டு தாந்திரிக சாதனத்தின் உண்மையை உலகுக்கு உள்ளவாறு விளக் கிக்காட்டத் தேவி திருவுளம் கொண்டாள் போலும். தெய்வாதீனமாகத் தம்பால் சுமத்தப்பட்டிருந்த உயர் காரியத்தைச் செய்து முடிப்பதற்கு பிராம்மணி யம்மை யார் அல்லும் பகலும் முயன்று வந்தார். அவர் பகலெல் லாம் அங்குமிங்கும் அலைந்து பூஜைக்கு வேண்டியனவும், கிடைப்பதற்கரியனவுமான பண்டங்களைத் தேடுவார்; இரவெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு ஒவ்வொன்றாகச் சாதனங்களை முறையே கற்பிப்பார். இவ்விதம் அறு பத்து நான்கு சாதனங்களையும் இவர் சாதித்துத் தேவி யின் அருளால் சித்திபெற்றார். அவைகளிற் பெரும்பான் மையானவை அபாயம் மிகப் பொருந்தியவை. நள்ளிர விலேதான் தாந்திரிக சாதனங்கள் யாவும் புரிதல் முறை. சாதகன் தனியாக, மயானக்கரையில், அமாவாசை இரு ளில், சவத்தின்பேரில் அமர்ந்துகொண்டு சில சாதனங்

கள் செய்யவேண்டும். அப்போது மகாகாளி தனது எண்ணிறந்த அகோர வடிவங்களுடன் பிரசன்னமாவாள். கேவலம் கோழை யொருவனின் கதி அந்நிலையில் என்னவாகுமென்பது சொல்ல வேண்டுவதில்லை "பிரபஞ்ச தத்துவங்களெல்லாம் என்முன் தாண்டவம் புரிகையில், ஆத்மாவாகிய நான் சாக்ஷியாயிருக்கிறேன். மாயாஅதீதனாகிய எனக்கு மயக்கமேது?" என்னும் சாதகனின் கூற்று அனுபவ சித்தமா, அல்லது வெறும் பேச்சளவுதானா என்பது அந்தச் சந்தர்ப்பத்தில் வெளியாகிவிடும். சாதகனை ஒரு கணப் பொழுதிலெடுத்துக் கசக்கி விழுங்கிவிடும்படியான உக்கிர ரூபங்களுடன் தேவி ஸ்ரீ ராமகிருஷ்ணர் முன் பிரசன்னமானாள். "அம்மா, உன் பிள்ளையாகிய என் முன் நீ எவ்விதம் வேண்டுமானாலும் வா. ஆனால் உன்னிடம் அடைக்கலம் புகுந்துள்ள என்னை மட்டும் கைவிடாதே" என்றார் அந்தப் பயங்கர வடிவங்களைக் கண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர். இத்தகைய பிள்ளையிடத்து எந்தத் தாய்தான் சினந்து கொள்வாள்? அல்லது பயமுறுத்த எண்ணங் கொள்வாள்?

திவ்விய பாவமென்பது இன்னும் கடினமானது. தன் அகோர வடிவங்களைக் கண்டு அஞ்சாதிருக்கும் சாதகனுக்கு அபயம் தந்தருளியபின், திவ்விய பாவ சாதனங்கள் செய்யும்போது வரம் தருதற்குப் பராசக்தி எழுந்தருள்கிறாள். அப்போது அவள் தனது மோகன சக்தியாவையும் சாதகன் முன் காட்டுகிறாள். பூஜை பலிதமாகும் தருணத்தில் வழிபடுபவன் கண்ணெதிரே தோன்றும் சௌந்தரிய வடிவங்கள் வருணனைக்கு எட்டாதவை. காம வாசனை சிறிதேனும் சாதகன் மாட்டு இருக்குமாயின் அவன் மோக வலையில் அகப்படுவது திண்ணம். தேவாதிகளையும் மயக்கி விடும்படியான அநிர்வசனீய வல்லமையுடையவள் பராசக்தி; அத்தகையினளை அசுத்த மனமுடைய மானுடனொருவன் வெல்லுதல் எங்ஙனம்? ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும் இந்தச் சோதனை வந்தது. ஆனால் அவர் குழந்தையைப் போல மாசற்ற மனதை

யுடையவர். பெண்பால் யாவும் பராசக்தியின் ஞாபகத்தையே அவருக்கு ஊட்டின. அன்னை வந்து விட்டாள் என்று அகமகிழும் குழந்தையிடத்து மோகன சக்தி செல்லுதற்கு இடமும் உண்டோ? தூய்மையை அணிகலமாகக் கொண்டு அறுபத்து நான்கு சாதனங்களையும் செய்து முடித்து, பராசக்தியின் பேரருளுக்குப் பாத்திரரானார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

தாந்திரிக சாதனங்கள் செய்து வந்தபோது ஸ்ரீ ராமகிருஷ்ணர் பெற்ற அனுபவங்கள் பலப்பல. புன்மை, புனிதம் இவைகளைப் பற்றிய வேற்றுமைப் புத்தி இவரிடத்தினின்று அறவே அகன்றுவிட்டது. பொதுமகளுங் கூடப் பராசக்தியின் வடிவாகவே இவருக்குத் தோன்றினாள். சொல்லத் தகாத இழிமொழிகளுங்கூடத் தேவியின் சொரூபமாகிய அக்ஷர மாலை (எழுத்துத்திரள்) என அவர் காதில் வீழ்ந்தன. குண்டலினி சக்தி மூலதாரத்தினின்று சகஸ்ராரம் வரையில் எழும்போது தமக்குண்டான அனுபவங்களை யெல்லாம் அப்படியப்படியே சொல்லுவார். அவ்வாறு சொல்லிக்கொண்டு வருகையில் விசுத்த சக்கரத்துக்குக் குண்டலினி வந்தவுடனே நாக்குளறி அவரால் பேச முடியாது போய்விடும். ஆஞ்ஞா சக்கரத்துக்குக் குண்டலினி எழும்போது பரமாத்மாவின் பரிபூரண தரிசனம் கிட்டுகிறதென்று சமாதி கலைந்தபின் சொல்லுவார். "சஹஸ்ராரத்துக்குக் குண்டலினி எழும்போது ஜீவன் பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து விடுகிறது. அவதார புருஷன் ஒருவன் மட்டும் இந்த உயர்நிலையிலிருந்து கீழிறங்கிப் பிரபஞ்ச ஞாபகம் அடைகிறான். ஏனைய ஜீவன்முக்தர்கள், கடலில் மூழ்கும் உப்புப் பிரதிமைகள்போல அகண்ட சச்சிதானந்தத்தில் ஐக்கியமாய் விடுகிறார்கள். குண்டலினி சகஸ்ராரம் அடைந்த இருபத்தொரு நாளைக்குள் ஜீவன் முக்தனது தேகம் விழுந்துவிடும்." இவ்வாறெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லுவார். தமது அனுபவப்படி ஐந்து வெவ்வேறு விதங்களில் குண்டலினி சக்தி

மேலெழும்பிப் போனதாகவும் அவர் சொல்லி யிருக்கிறார். குண்டலினி மேலேற ஏற ஞான பூமிகள் ஏழினது அவஸ்தைகளையும் அப்படியப்படியே அவர் எடுத்துச் சொல்லுவார். ஏழாம் பூமியாகிய சகஸ்ராரத்தில் சிவம் சக்தி என்னும் வேற்றுமை போய் வெறும் சேதனம் (பேரறிவு) மட்டும் தன் மயமாயிருப்பதால் அது மொழிக்கு எட்டாதது என்பார்.

இக்காலத்தில் ஜகத்தின் ஆதிகாரணத்தை ஒரு ஜோதிமய முக்கோணம் போல அவர் அனுபூதி வாயிலாகக் கண்டார். அந்த முக்கோணத்தினின்று எண்ணிறந்த ஜனங்கள் தோன்றி மறைந்தது அவருக்குத் தெரிந்தது. அனாகத தொனியை ஒரு தடவை அவர் இடையறாது கேட்டு வந்தார். அப்போது பறவைகளின் பாஷைகளையும் அவர் அறிந்து கொள்ள இயன்றது. அதிகாலையிலும் மாலையிலும் புள்ளினங்கள் கூட ஈசுவரனை வழிபடுகின்றன வென்று அவர் சொல்லியிருக்கிறார். அஷ்டமா சித்திகளும் அப்போது அவர் கைவசமாயிருந்தன. ஆனால் முமுக்ஷுவுக்கும் பரம பக்தனுக்கும் அவை யாவும் துச்சமெனத் தோன்றுவன. பரமபதப் பேற்றுக்கு ஊறு விளைவிப்பவைகளில் அஷ்டமாசித்தியில் விருப்பும் ஒன்றும். தாந்திரிக சாதனங்களில் முதிர்ச்சியடைந்த பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணரது தேகாத்ம புத்தி முற்றிலும் போய்விட்டது. குழந்தையைப்போல நிர்வாணமாக இருப்பதில் அவர் வெட்கம் சிறிது மற்றவராயினார்.

வேதாந்தத்தின் தத்துவங்களை யெல்லாம் திரட்டி யெடுக்கும்போது 'பயமின்மை' 'நிராசை' என்னும் இரண்டு வார்த்தைகளில் அவைகள் அடங்கி விடுகின்றன. அஞ்சா நெஞ்சம் படைத்து ஆசாபாசத்தில் கட்டுப்படாதிருப்பவன் மட்டும் பிரம்ம வித்தைக்குப் பாத்திரனாவான். இதே தத்துவத்தைத் தாந்திரிக சாதனங்கள் மற்றொரு வகையில் பிரஸ்தாபிக்கின்றனவென்று ஸ்ரீ ராம

கிருஷ்ணர் தமது சாதனங்களைக்கொண்டு நன்கெடுத்துக் காட்டியிருக்கிறார். பிரகிருதித் தாயின் விகாரங்களைக் கண்டு மருண்டோ மயங்கியோ போகாதவனே மெய்த் துறவி யாவன். தூய அன்புள்ள விடத்தில் அச்சம், ஆசை இரண்டுமில்லை. தூய அன்புடன் அன்னை பராசக்தியைப் போற்றினால் அவள் அபயம் வரம் இரண்டையும் தருகிறாள். ஆகவே பிரம்ம வித்தைக்குரிய உபாயங்களில் தாந்திரிக சாதனமும் ஒன்றென்பது ஸ்ரீ ராமகிருஷ்ணர் உலகுக்கு எடுத்துக் காட்டிய உண்மைகளில் ஒன்று.

## ஆறும் அத்தியாயம்

## மலரை நாடிய வண்டுகள்

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் எட்டிய உறவினரான இராமதாரகர் என்பவர் சுமார் எட்டு வருஷகாலம் இராதா கோவிந்தர் கோயிலில் அர்ச்சகராக அமர்ந்திருந்தார். ஹலதாரி யென்று இவர் பெரும்பாலும் அழைக்கப்பட்டார். இவர் ஏதாவது சாபமிட்டுவிட்டால் அது அநேகமாகப் பலிதமாய் விடுவது வழக்கம். ஆதலால் ஜனங்கள் அவரிடத்து எச்சரிக்கையா யிருந்தார்கள். இராமதாரகர் பயின்றுவந்த ஒரு துராசாரத்தின் நிமித்தம் பலர் அவரைப் பற்றிக் குறை கூறியதைக் கேள்வி யுற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர், அவரது நன்மையை நாடி ஒரு நாள் அவரை மிகவும் கடிந்து பேசினார். அவ்வார்த்தைகளைக் கேட்டுச் சகிக்க முடியாத இராமதாரகர், "நீ இவ்வண்ணம் மரியாதையின்றிப் பேசினதற்காக, இரத்த இரத்தமாகக் கக்கக் கடவாய்" என்று சாபமிட்டார். அவ்விதமே சொற்ப நாளைக்குள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வாயினின்று உறைந்த இரத்தம் கறேலெனக் கொடியாக வெளிவரத்

தொடங்கியது. அதைப் பார்த்தவர்கள் அனைவரும் என்ன விபத்து நேரிடுமோ வென்று அஞ்சினர். ஆனால் அப்போது அவண் வதிந்துவந்த ஒரு சந்நியாசி அது யோகசாதனம் ஒன்றின் பயனாக விளைந்ததென்று சொல்லி எல்லோருக்கும் தைரிய மூட்டினார். அச்சமயம் ஸ்ரீ ராம கிருஷ்ணர் ஹடயோகம் பயின்று வந்தது உண்மையே. அவ்வாறு இரத்தம் வராதிருந்தால், அவர் ஜடசமாதி எய்தி உடலை உகுத்திருப்பாரென்று அந்தச் சந்நியாசி சொன்னார். ஆகவே சாபமாக வந்ததும் அவருக்கு நன்மையையே விளைத்தது.

இராமதாரகர் ஒரு பெரும் பண்டிதர்; ஆனால் கல்விச் செருக்குடையவர். அவர் சில சமயங்களில் ஸ்ரீ ராம கிருஷ்ணரது அருள் தாகத்தையும், பிரேம பக்தியையும், ஞானானுபவத்தையுங் கண்டு, 'உன்னிடம் தெய்வீகம் இருக்கிறதென்பதை இப்போது நன்கு அறிந்து கொண் டேன்' என்று சொல்லுவார். ஆனால் வேறு சில சமயங் களில் பாகவதம், பகவத் கீதை, அத்யாத்ம ராமாயணம், ஞானவாஸிஷ்டம் முதலிய சாஸ்திரங்களைப் படிக்க ஆரம் பித்துவிட்டால், அவர் கல்விச் செருக்கால் கவரப்பட்டு முற்றிலும் மாறிவிடுவார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமஸ்கிருதம் கற்றிராவிடினும் எதையும் கேட்ட மாத்திரத்தில் அதன் உட்கருத்தை அறிந்துகொள்ள வல்லவராயிருந்தார். அவர் ஹலதாரியிடம் "நீ வாசிப்பவைகளெல்லாம் எனக்கு நன்றாய் விளங்குகின்றன; அவ்வுண்மைகளைத் தெளிவாய் நான் என் உள்ளத்தில் உணருகிறேன்" என்பார். இதைக் கேட்டதும் கர்வம் பிடித்த பண்டிதர் "நீயோ கல்லாத மடையன், உனக்கு இவையெல்லாம் எங்கே எட்டப் போகின்றன? போ!" வென்று கடிந்து இகழ் வார். வாசா ஞானியாகிய இந்த இராமதாரகர் மற்றொரு முறை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் ஜாதியொழுக்கம், குலா சாரம் முதலியவற்றை அனுஷ்டியா திருந்ததைக் கண் டித்து, "நீ உன் மக்களுக்கு எவ்வாறு மணம் செய்விப் பாய் பார்ப்போம்!" என்று கூறினார். இதைக்கேட்ட

ஸ்ரீ ராமகிருஷ்ணர் புன்னகை புரிந்து, உம்மைப்போல "பிரபஞ்சம் பொய்; பிரம்மமே மெய்" யென்று சொல்லிக் கொண்டே பிள்ளை பெறுபவன் நானல்ல. ஆகா! உமது ஞானத்தைத் தான் என்னென்று சொல்வது!" என்று விடையிறுத்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரது சுபாவம் ஒரு பாலகனதைப் போன்றது. தமது அருள் தாயிடம் அவர் குழந்தையைப் போலவே நடந்துகொண்டார். "அம்மா, உனது மகிமையை நான் புத்தகங்களினின்று அறியமாட்டேன். நீயே எனக்கு எல்லாம் புகட்டி யருளவேண்டும்" என்று அவர் பிரார்த்திப்பார். சந்தேகம் ஏதாவது தோன்றிய போதெல்லாம் அன்னையிடத்துப் போய்த் தெரிவித்து அதை அகற்றிக்கொள்வார். நூல் பல கற்றிருந்த ஹால தாரி அரும்பெரும் விஷயங்களைப்பற்றிக் குழப்பமுற வாதாடியது மல்லாமல் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்ட தெய்வீகத் திருக்காட்சிகளையெல்லாம் வெறும் மனோ கற்பித மென்றே சாதித்தார். இதைக் கேட்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர், தேவியை அடைதற்காகப் பரிதவித்தழுத தம்மை அவள் ஏமாற்றிவிட்டாளோ வென்றஞ்சினவராய் தாயின் சந்நிதிக்கு ஓடினார். சிறிது நேரத்திற்குள் அவர் உறுதி பெற்றவர்போலத் திரும்பி வந்து, 'நீர் என்னவேண்டுமானாலும் பிதற்றும். அன்னை சொல்லுவதைத்தான் நான் நம்புவேன்' என்றார்.

தேச சஞ்சாரம் செய்துவந்த சாதுக்கள் பலர் தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு அருகாமையிலுள்ள ஏகாந்தமான நந்தவனத்துக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் இருப்புப் பாதை கிடையாது. ஆதலால் பூரி ஜகன்னாதத்துக்கும் கங்கா சாகரத்துக்கும் யாத்திரை செய்த சாதுக்கள் இங்கே சொற்ப நாள் தங்கிச் சிரமபரிகாரம் செய்துகொள்வது வழக்கம். சில சமயம் ஆத்மானுபவத்தில் மிக உன்னத நிலைமை யடைந்தவர்களும், கல்வியறிவில் சிறந்தவர்களும் அங்கு

வருவதுண்டு. அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் நெடு நாள் வசித்திருப்பது மல்லாமல் அரும் பெரும் விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சியும் செய்வார்கள். அவர்களுக்குள் அபிப்பிராய பேதமுள்ள நுட்பமான பல விஷயங்களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது இயல்புக்கு ஏற்றவாறு, எல்லாருக்கும் சமாதான முண்டாகும்படி, சில தெள்ளிய வார்த்தைகளால் நன்கு விளக்கிக் காட்டிவிடுவார். எத்தனையோ நூல்களைக்கொண்டும் அகற்ற முடியாத ஐயங்களை இவர் எளிய முறையில் நிவர்த்தி செய்வது கேட்போரை வியப்பூட்டும்.

இந்துமதமானது ஒரு சாகரம் போன்றது. விக்கிர காராதனையிலிருந்து அத்துவித வேதாந்தம் வரையிலுள்ள எல்லாக் கொள்கைகளுக்கும் இந்து மதத்தில் இடமுண்டு. இதில் அடங்கிய பல்வேறு உட்சமயங்கள் ஒன்றோடொன்று முரண்படுவது போலத்தோன்றினும் அவையாவும் ஒரு பொருளையே நோக்கமாகக் கொண்டனவென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது வாழ்வில் நன்கெடுத்துக் காட்டினர். அவரைப் பற்றி ஓர் அறிஞர் வருணித்திருப்பதாவது :—" இந்து மதத்தின் இனிமைக்கும் பெருமைக்கும் இந்த மகான் சிறந்த அத்தாட்சியாயிருக்கிறார். இவர் உடற்கூற்றை முற்றிலும் வென்றவர், இப்பெரியார்பால் ஆத்ம பரிபூரணமும், பாரமார்த்திகமும், பேரின்பமும் பரவசத்துக்கு ஏதுவான பரிசுத்தமும் ஒருங்கே திகழ்கின்றன. இந்து மதம் போற்றுகிற ஒரு முக்தனது பான்மைக்குத் தக்கபடி இவர், பொய்யானதும் பயனற்றதுமான பிரபஞ்சத்தில் வாழ்ந்தும் அதில் ஈடுபடாதவராய் சாக்ஷி மாத்திரமாயிருக்கிறார். பிரகிருதியினின்று பிரிந்து இவர் தனியே சாக்ஷியாக நின்று வருவது, ஒவ்வோர் இந்துவின் உள்ளத்தையும் கவர்ந்துவிடுகிறது. இவர் வாழும் எளிய வாழ்வில் கடவுளினும் வேறான எண்ணமோ, தொழிலோ, கொள்கையோ நண்பனோ இல்லை. களங்கமில்லாத் தூய்மையும், பகரவொணாப் பரவச நிலையும், ஓதாது உணர்ந்த அந்த

மிலாப் பேரறிவும், குழந்தையின் சாந்தமும், மக்கள் அனைவர் மாட்டும் பேரன்பும், கடவுள்பால் அளவிலாத உள்ளன்புமே தமது வாழ்வுக்குற்ற உறுதிப் பொருள்க ளென இவர் தேடிப் பெற்றுள்ளார்.'' ஸ்ரீ ராமகிருஷ்ண ரது பெருமையும் இந்து மதத்தின் மாண்பும் ஒன்றுபட இந்த வருணனையில் அடங்கிக் கிடக்கின்றன. இந்து சமயமே மழுங்கி மறைந்து போதற்கிருந்த நெருக்கடி யான சந்தர்ப்பத்தில் எல்லா சமயங்களுக்கும் நடுநாயக மாக இவர் அவதரித்தார். யார்யாருக்கு எந்தெந்த வந் தனை வழிபாடுகளில் விருப்பமோ அவ்வவைகளை அவர் கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்து பெற்று மகிழ்ந்தார்கள். தாந்திரிக சாதனங்களில் இவர் முதிர்ச்சி யடைந்த பிறகு, இதழ்விரிந்த மலர்களைத் தேடி வண்டுகள் வரு வதுபோல சாக்த சந்நியாசிகள் ஏராளமாகத் தக்ஷி ணேசுவர ஆலயத்துக்கு வரலாயினர். அவ்விதமே வைஷ்ணவ, சைவ வேதாந்த சாதனங்களில் இவர் சித்தி யடைந்த பிறகு அந்தந்த சம்பிரதாயங்களைச் சேர்ந்த பெரியோர்கள் இவரிடத்துத் திரண்டு வந்துசேர்ந் தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரது உயரிய அனுபவங்களும் சமரச நோக்கமும் அப்பெரியார்கள் மூலம் நாலுபக்க மும் பரவி வந்தன.

தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருந்த பல பெரியோர் களின் மகிமையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் வியந்து சொல்லி யிருக்கிறார். அவர்களில் ஒருவர் இடையறாது இறைவ னது திருநாமத்தை உச்சரித்து வந்தது மல்லாமல், ஒரு சிறு புஸ்தகத்துக்குப் புஷ்பம் முதலியன சாத்திப் பூஜை யும் செய்து வந்தார். அந்த நூல் எதைப்பற்றியதென்று ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பார்த்தபோது அதன் ஒவ் வொரு பக்கத்திலும் பெரிய எழுத்துக்களால் கடவுளது திருநாமம் மட்டும் எழுதப்பட்டிருப்பதைக் கண்டார். ஒளி வீசிய முகத்துடன் மற்றொரு சாது அங்கு வந்திருந் தார். அந்தர்முக நோக்குடன் புன்னகை புரிந்த வண்ண மாய் அவர் நெடுநேரம் உட்கார்ந்திருப்பார். காலை யிலும் மாலையிலும், விண்ணையும் மண்ணையும் மரம் முத

வியவைகளையும் அவர் பார்த்துவிட்டு "ஆகா, சிருஷ்டியின் விசித்திரத்தை என்னென்று சொல்வது!" என்று பகர்ந்துகொண்டே ஆனந்தக் கூத்தாடுவார். சதா இவ்விதம் செய்துவந்ததே அவருடைய பிரார்த்தனை, பூஜை எல்லாம். அவர் சிவ போகம் பெற்றுய்ந்த பெரியார் என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணரது கருத்து. ஆபாசம் பிடித்த பித்தன் போன்ற அவதூதர் ஒருவர் கொஞ்ச காலம் அங்கு வசித்து வந்தார். பிச்சைக்காரர்களுங்கூட அவரருகிற் செல்ல அருவருத்தார்கள். நாய்களுடன் அமர்ந்து கொண்டு எச்சிலைகளில் எறிந்துகிடந்த பண்டங்களைப் புசிப்பது அவரது வழக்கம். அவரும் ஒரு மகா ஞானியென்றே ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லி வந்தார். சந்நிதியில் நின்றுகொண்டு கோயில் முழுதும் கிடுகிடுக்கும்படி அவர் பாடினது தேவிக்குப் பிரீதிகரமா யிருந்ததென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவார். தக்ஷிணேசுவரத்தினின்று அந்த அவதூதர் வெளியேறுகையில் ஹிருதயர் அவரைப் பின் தொடர்ந்து சென்று தமக்கு ஏதாவது உபதேசிக்கும்படி இரங்கி வேண்டினர். அதற்கு அவர் அண்டையிலிருந்த சாக்கடையைக் காட்டி, "என்றைக்கு உனக்கு இதுவும் கங்கை நீரும் ஒரே விதமாய்த் தோன்றுகிறதோ அன்றைக்கு நீ கடவுளைக் காண்பாய்!" என்று சொல்லி விட்டுப்போனர்.

## ஏழாம் அத்தியாயம்

# பிரேமைப் பைத்தியம்

தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருந்தவருள் ஜடாதாரி என்ற வைஷ்ணவப் பெரியாரும் ஒருவர். அவர் பால ராமனைத் தம் குழந்தையெனப் பாவித்து பக்தி செய்து வந்தார். தேச சஞ்சாரம் செய்து வந்த இச்சான்றோரது சாதனத்தின் பெருமை யாருக்கும் விளங்கவில்லை. ஒரு சிறிய பித்தளை விக்கிரகத்தின் மூலம் அவர் ஸ்ரீ ராம பிரானை அல்லும் பகலும் சேவித்தது மட்டும் பார்த்தவர் களுக்குக் கண்கூடாகத் தெரிந்தது. அவர் நீண்டகால மாகப் பயின்று வந்த வாத்ஸல்ய பாவனையில் பிரீதி யடைந்த ஸ்ரீ ராமபிரான் அவர் முன் பிரத்தியட்சமாக எழுந்தருளி இடையறாமல் தரிசனம் தந்து வந்தார். இவ் விவரத்தை மட்டும் அவ்வயோதிகர் எங்கும் வெளியிட வில்லை. பாலராமன் திருவுருக் கொண்டு தம்முடன் வதிந்து வருவதையும், தாம் படைத்த அமுதை அப் பிள்ளை அருந்துவதையும், தம்முடன் அவன் ஓடியாடி விளையாடுவதையும் அப் பெரியார் இரகசியமாக அனுப வித்து ஆனந்தமடைந்திருந்தார்.

ஆனால் இவ்வைபவங்கள் யாவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருவருக்கு மட்டும் சொல்லாமலே விளங்கிவிட்டன. ஜடாதாரியின் பெருமையை அறிந்த இவர் நெடுநேரம் அவருடன் பக்தி விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண் டிருப்பார். அதுகாலை பாலராமனுக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பால் பெரும் பற்றுதல் உண்டாகிவிட்டது. அக் குழந்தை அடிக்கடி தம்மிடம் ஓடி வந்துவிடுவதை அவர் காண்பார். வெறும் மதி மயக்கத்தால் இக்காட்சி காணப்படுகிறதோ வென்று அவருக்கு முதலில் ஐயம் உண்டாயிற்று. ஆனால் ஏனைய பொருள்களைக் காண் பதுபோலவே இப்பிள்ளையையும் அவர் நாள்தோறும்

பார்த்து வந்தமையாலே அந்தச் சந்தேகம் நீங்கப் பெற்றார். தனக்குத் தின்பண்டம் ஏதாவது வேண்டுமென்று பாலராமன் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் தொந்தரவு செய்வான். அவர் சொல்லுக் கடங்காது பூந்தோட்டத்தினுள் சென்று மலர் கொய்வான்; வெயிலில் ஓடி விளையாடுவான்; கங்கையில் நெடு நேரம் நீராடுவான். அவனிடம் அன்னைபோல அன்பு பாராட்டிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருமுறை அவனது சேஷ்டைச் செய்கைகளுக்காக அவனைக் கடிந்து கன்னத்தில் அறைந்தார். அப்போது அந்தப் பிள்ளை உதடுபிதுங்க நைந்துருகிப் பரிதாபமுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்தவண்ணமாய் முத்து முத்தாகக் கண்ணீர் சிந்தினான். மற்றொரு முறை அகப்படாத தின்பண்டம் யாதோ வேண்டுமென்று பால ராமன் பிடிவாதமாய் ஓலமிட்டபோது அவர் தமக்குச் சுலபமாய் அகப்பட்ட அவல் மட்டும் கொஞ்சம் தந்தார். அதை மெல்லுகையில் அதிலிருந்த நெல்லொன்று ஸ்ரீ ராமனது நாவைக்கீறி இரத்தம் பெருகச் செய்துவிட்டது. இது போன்ற சந்தர்ப்பங்களில் பாலனின் பரிதவிப்பைப் பார்த்த ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு மனமிளகிவிடும். கோசலை பாராட்டித் தாலாட்டி வளர்த்த உன்னை நான் கடிந்து கஷ்டப்படுத்தலாயிற்றே" என்று கண்ணீர் சிந்திக்கொண்டு இரங்கி மொழிவார். இதைப்பற்றி அவர் பிற்காலத்தில் சொல்லிக்கொண்டிருந்த போது அவருக்கு அழுகை வந்ததைப் பார்த்தவர்களுக்கு அவருடைய வாத்ஸல்ய பாவனை எத்தகைய தென்பது தெரிய வந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பழகிவிட்ட பாலராமனுக்கு ஜடாதாரியுடன் அதிக காலம் தங்க முடியாமற் போய்விட்டது. அமுது படைப்பதற்காக அவர் பிள்ளையைத் தேடித் திரிவார். ஸ்ரீ ராமகிருஷ்ணரை விட்டுப் பிரிய அவன் மறுத்தால் நொந்து கொண்டவர்போல அவனைப் பார்த்து, "ஆம், ஆம், உன் சுபாவத்தை நான் நன்கறிவேன். உன் பிதா மரித்ததையுங்கூடப் பொருட் படுத்

தாது வனத்தில் இருந்துவிட்டவ னல்லவா நீ!" என்று அந்த வைஷ்ணவர் இடித்துரைப்பார். எனினும் ஜடாதாரியின் உள்ளத்தினின்று தைலதாரை போல இடையருது பெருகிய பக்தி பயன்படாமற் போகுமோ? எங்கும் நிறைந்துள்ள ஐயன் தமது உள்ளத்தும் குடி கொண்டுள்ளான் என்பதை அவனருளாலே அவர் அறிந்தார். ஆதலால் அக்குழந்தையை ஸ்ரீ ராமகிருஷ்ண ருடன் மகிழ்வுற்றிருக்க விட்டுவிட்டு ஜடாதாரி தக்ஷி ணேஸ்வரத்தினின்று ஒரு நாள் வெளியேகிஞர்.

தாந்திரிக சாதனங்கள் முற்றுப் பெற்றதும் ஸ்ரீராம கிருஷ்ணர் வைஷ்ணவ சாதனங்களை மேற்கொண்டது கவனிக்கத் தக்கது. ஒன்றேடொன்று ஒவ்வாத வெவ் வேறு சுபாவங்களும் இவரிடம் ஒருங்கே சேர்ந்திருந்த படியாலேயே இது இயல்வதாயிற்று. ஆண்மைக்கு அணிகலன்களாகிய அஞ்சாமை, வலிமை, வீரியம் முதலி யன இவர்பால் மலிந்திருந்தது போலவே பெண்மையின் பூஷணங்களாகிய மாண்பு, மெல்லியல்பு முதலியனவும் இவர்மாட்டு மிளிர்ந்திருந்தன. அணுவளவேனும் தவ நெறி பிறழாத ஞானியாயும், சந்தர்ப்பத்துக்கு ஏற்ற வாறு இயைந்து போம் பக்தனுயும் அவர் ஒருங்கே விளங் கிஞர். நல்லொழுக்கம் பயிலுவிக்கும் போது எவ்விதக் குற்றமும் ஒருவன் மாட்டு இருத்தற் கிடமில்லாதபடி கடும்முறைகளைக் கையாளுவாராயினும் உண்மையில் அவர் தாயைப் போன்ற தயாள குணமுடையவர். இவ் வித குணசீலங்கள் ஒன்றேடொன்று முரண்படுவன வாகா. முடிவாகப் பார்க்கும்போது இவையாவும் பார மார்த்திகத்துக்கு வழி காட்டுபவைகளேயாம். 'ஏது பாவித்திடினுமதுவாகி வந்தருள் செய்யும்' கடவுள் மாட்டு சாதகன் ஏதோ ஒரு பாவனைமட்டும் செலுத்து கிறன். அந்த ஒரு பாவனையின் அனுபூதி யடைந்தாலே அவனுக்குப்போதுமானது. ஆனல் ஸ்ரீ ராமகிருஷ்ண ரது இயல்பு இத்தகைய தன்று. தந்தை, தாய், தமர், மகவு, துணைவன் துணைவி இன்னும் எண்ணிறந்தவா றெல்லாம் அவர் கடவுளைப் பாராட்டினர். ஒரு

பாவனையிற் பக்குவமடைந்தவுடனே அவர் மற்றொரு பாவனையிற் பயின்று வருவார். இவ்விதம் கடவுளை அடைதற்கான வழிகள் யாவும் காண்பதற்கெனவே அவர் மண்ணுலகில் வாழ்ந்து வந்தார்.

ஜடாதாரி ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் ஒப்புவித்த பால ராமனது பித்தளை விக்கிரகம் இன்று தக்ஷிணேசுவர ஆலயத்திலிருந்து வருகிறது. ஆனால் அது நம் போன்ற கோடானுகோடி மாந்தருக்குப் பித்தளை விக்கிரகமாகவே தோன்றுகிறது. ஓடி விளையாடிய பாலராமனது சின்மய வடிவை நாம் அதில் காண்கிறோமில்லை. ஆதலாலே அப் பெரியார் இருவரும் கண்ட காட்சிகள் வெறும் பிராந்தி யென்று சொல்லிவிடலாமா? அவ்வாறு பகரத்துணியு முன் ஒருவன் தன்னைத்தானே ஆராயட்டும். "யாதொன்று பாவிக்க நானதுவாதலா லுன்னை நானென்று பாவிக்கி னத்துவித மார்க்கமுறலாம்" என்பது ஆப்த வாக்கியம். வயிற்றுப் பிழைப்புக்கென அல்லும் பகலும் மண்ணையும் பொன்னையும் எண்ணிக் கிடப்பவர்களுக்கு இடையறா ஈசுவர பாவனை வருவதெங்ஙனம்? நிலையிலாப் பொருள் ஈட்டுதற்கு ஒருவன் ஆயுள் முழுதும் அலைந்து திரிய வேண்டுவது அவசியமென்றால், பெறுதற்கரிய பாரமார்த்திகத்துக்கு இவ்வளவுதான் பாடுபட்டாற் போது மென்று யார்தான் சொல்லக்கூடும்? பெரியார்கள் சென்றவழி இன்னவென்று உன்னி உன்னி ஓர்ந்து அவ் வழி செல்லுதல் வேண்டும். அல்லும் பகலும் அருள் தாகமெடுத்து அண்ணலை வேண்டி அழுதாலொழிய அத் தகைய அரும் பெரும் அனுபவங்கள் நமக்குக் கிட்டா.

வாத்ஸல்ய பாவனை முடிந்ததும், பாவனைகள் யாவினும் மேலானதாகிய மதுரபாவனை அல்லது தலைவன் தலைவி வழிபாட்டில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஈடுபட்டார். மேலே சொல்லியபடி சாதகன் கடவுளை மணவாளனாகவும் தன்னை மணவாட்டியாகவும் கருது வது இந்த சாதன முறையாகும். பரமாத்மா ஒருவனே

யதார்த்தமா யுள்ளவன். ஜீவகோடிகள் யாவும் அப் பரமாத்மாவின் சக்தி சொரூபம். ஆதலால் ஒவ்வொரு ஜீவனும் உண்மையில் கடவுளது நாயகி யென்பதை அடிப்படையாகக் கொண்டது இந்த சாதனம். மனிதன் தொன்றுதொட்டு எதை ஆழ்ந்து எண்ணி வந்திருக்கிருனே அதுவே அவனுக்கு மெய்யாகத் தோன்றுகிறது. ஏகமாயுள்ள பரம்பொருளை அநேக வடிவுடைய பிரபஞ்சமாக அவன் எண்ணி வந்திருக்கிருன். ஆனல் திரும்பவும் அபேத பாவனை பயின்ருல் பிரபஞ்சம் மறைந்து போய் விடுமென்பது மேலோர்களது சித்தாந்தம். பிரபஞ்சத்தைக் கற்பிப்பது மனம். தன்னை ஆண் என்று நினைக்கும் ஜீவன் ஆண் ஆகிறது; பெண் என்று நினைப்பது பெண் ஆகிறது. மேலும் ஒருவித எண்ணங்கள் வலுக்குங்கால் மற்ருெருவித எண்ணங்கள் மனதினின்று அகலுதல் இயல்பு. ஆதலாலேதான் சாதகனொருவன் தன்னை நாயகியாகவும் கடவுளை நாயகனுகவும் பாராட்டித் தனது உள்ளத்தினின்று துச்ச எண்ணங்கள் யாவையும் அப்புறப்படுத்துகிருன். காலில் தைத்திருக்கும் ஒரு முள்ளைக் களைய மற்ருெரு முள்ளை உபயோகிப்பது போன்றது இந்தச் சாதனம். தேகவுணர்ச்சி இருப்பதாலேயே ஜீவன் தன்னை ஆண் என்ருே பெண் என்ருே எண்ணுகிருன். ஆதலாலே ஆணுயிருக்கும் ஒருவன் தன்னைப் பெண் என்று கருதிவந்தால் ஓர் எண்ணம் மற்ருேர் எண்ணத்தால் அடிபட்டுப்போய் முடிவில் ஆண் பெண் உணர்வற்ற ஆத்மாநுபூதி பெறுதற்கு அருகனுகிருன். தலைவன் தலைவி எண்ணம் முதிரும்போது சித்த விருத்திகள் யாவும் அற்றுப்போய் நாயகனைப் பற்றிய ஒரே எண்ணந்தான் நிலை நிற்கிறது. அப்போது அத்துவித நிலை எய்துவதற்குச் சாதகன் பக்குவமடைகிருன்.

மதுரபாவனை பயிலும் வைஷ்ணவர்கள் ஸ்ரீராதையின் அருள் பெறுதற்காக முதலில் அத்தேவியை வழிபடுவது வழக்கம். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவ்விதமே செய்து வந்தார். எக்கர்மத்தையும் அரைகுறையாக ஆற்றுவ

தென்பது அவர்பால் கிடையாது. ஸ்ரீ ராதையைப் பற்றிய ஒரே எண்ணந்தான் இடையரு து அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. பெண்ணைப் போலவே சேலை தரித்துக்கொண்டு மதுராநாதர் வீட்டுப் பெண்கள் கூட்டத்தில் பழகி வந்தார். இவரது மகிமையை யறிந்திருந்த அந்த மகளிரும் வேற்றுமையின்றி இவரோடு கலந்து பழகத் தயங்கவில்லை. ஆதலால் பெண்பாலின் சுபாவங்களெல்லாம் இயல்பாகவே இவர்மாட்டு வந்துவிட்டன. இவரது பேச்சும் அபிநயங்களும் பெண்களுடையவை போலவே இருந்தன. இடது காலை முன் வைத்து நடக்கும் மகளிர் வழக்கமும் இவருக்கு வந்துவிட்டது. கூடை ஒன்றைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு ஆராதனைக்காக இவர் மலர் கொய்யும்போது முற்றிலும் பெண்போலவே தோன்றுவார். ஹிருதயர் மதுராநாதர் போன்றவர்களுக்குங் கூட சுலபத்தில் இவரை அடையாளம் கண்டு பிடிக்க முடியாமற் போய் விட்டது.

பிறகு இராதையைப்போலவே ஸ்ரீ ராமகிருஷ்ணரும் கண்ணபிரானை வழிபடத் தொடங்கினார். பதியின் நல் வரவை எதிர்நோக்கி நிற்கும் பத்தினிபோல அவர் கிருஷ்ணனை வேண்டி அழைப்பார். தலைவனைப் பிரிந்த காரணத்தால் அவர் பட்ட துயரத்தைப் பார்க்கும்போது விரைவில் அவனைக் காணுவிடின் அவரால் உயிர்வாழவே முடியாதெனத் தோன்றியது. 'எப்போது என் நாதனைக் காண்பேனோ!' என்று கசிந்துருகிய வண்ணமா யிருப்பார். நாட்களும் மாதங்களும் சென்றனவாயினும், அவர் தலைவன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்து நிற்றல் மாறவில்லை. ஐயத்தால் அல்லது அலுப்பால் அவர் ஒரு கணப்பொழுதாவது ஊக்கத்தை விடவில்லை. அன்ன பானுதிகளை அடியோடு மறந்துவிட்டு நாள்முழுதும் நாயகனை அழைத்து அழுதவண்ணமாகவே யிருந்தார். அவரது பக்தி நாளடைவில் பிரேமைப் பைத்தியமாய் மாறிவிட்டது. முந்தைய சாதனங்களின்போது இரண்டு

முறை அவரது உடம்பெல்லாம் தகதகவென்று பற்றி யெரிந்தது போலவே இப்போதும் எரியத் தொடங்கியது. மயிர்க்கால்கள் மூலம் சிறு துளிகளாக இரத்தம் கசிந்தூறி வெளிவந்தது. சிலவேளைகளில் சோகமிகுதியால் கணுக்கள் தளர்வுற்றும் புலன்கள் அடைபட்டும் போனமையால் அவர் செத்த பிணம்போலக் காணப்பட்டார். உள்ளம் அணுவணுவாய் நைந்துருகும்படியான இப் பேர்க்கொத்த அளவிலா ஊக்கத்தை உலகிற் காண்பது அரிதினும் அரிதன்றோ! ஸ்ரீ ராதையினிடம் காணப்பட்ட பிரேம பக்தியின் பத்தொன்பது இலட்சணங்களும் இவர் மாட்டும் மிளிர்ந்தன. இராதையின் சொரூபமே போல இவர் ஆகிவிட்டார். வைஷ்ணவ நூலோர் இதைத்தான் மகாபாவனை யென்பார்கள்.

ஆறுமாத காலம் கண்ணனையே நாடி நைந்துருகிய தன் பலனாக அவனது திவ்விய தேஜோமயத் திருக்காட்சி இவருக்குக் கிடைத்தது. அவ்வாறு எழுந்தருளிய கிருஷ்ணன் பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணரது திருமேனியில் ஐக்கியமானான். அதுமுதல் சுமார் இரண்டு மூன்று மாதகாலம் இவர் கிருஷ்ணனது சொரூபத்திலே சொக்கிக் கிடந்தார். தம்மைப் பற்றிய உணர்ச்சிகள் யாவையும் இழந்து தம்மைக் கிருஷ்ணனெனவே இவர் நினைத்து வந்தார். சராசரங்கள் யாவும் அவனது வடிவமாகவே இவருக்குப் புலப்பட்டன. அந்த அனுபவத்தின் பின்புதான் உள்ளக் கொதிப்பு அடங்கி அமைதி பெற்றது. பயனாக அவர் அடைந்த பேரானந்தம், அனுபவங்கள் எல்லாவற்றிற்கும் முடிவானதும் தலையாயதுமான அத்துவித நிலையை யடையும்வரை அவரைவிட்டு நீங்கவில்லை.

இக்காலத்தில் இவர்கண்ட ஒரு காட்சி கவனிக்கத் தக்கதாகும். ஒருநாள் இவர் இராதாகோவிந்தர் கோயிலில் அமர்ந்து அங்கே பாகவதம் படித்ததைக் கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது அவர் பரவச நிலை

யடைந்து கிருஷ்ண பகவானது திவ்விய சொரூபத்தைக் கண்டார். சிறிது நேரத்திற்குள் பகவானது மலரடிகளி லிருந்து ஒளியொன்று கிளம்பி வந்து பாகவதத்தையும், இவரது நெஞ்சையும் அப்பாதங்களோடு இணைத்து நின் றது. இதனின்றும் பகவான், பாகவதம் (கடவுளைப் பற் றிய நூல்கள்), பக்தன் ஆகிய இம்மூன்றும் வெவ்வேறாகத் தோன்றினும் உண்மையில் ஒன்றே என்பது ஸ்ரீ ராம கிருஷ்ணருக்கு நன்கு விளங்கியது.

## எட்டாம் அத்தியாயம்

## நிர்விகற்ப சமாதி

சொல்லுதற்கரிய பரம்பொருளை ஒரு சொல்லால் கூறத் துணியின், அதை அகண்ட சத்-சித்-ஆனந்தம் எனலாம். அது மனம் மொழிக்கு எட்டாதது. மாயா காரியங்களாகிய படைத்தல், காத்தல் அழித்தல் முதலிய விகாரங்கள் ஆங்கில்லை. இன்பம், துன்பம், உடைமை, வறுமை, நன்மை தீமை முதலிய துவந்தங்கள் அற்ற எல்லையில்லாப் பேரின்பம் அது. அந்த அகண்ட சேத னத்தில் ஞாதுரு, ஞானம், ஞேயம் முதலிய பேதங்கள் முடிவுறுகின்றன. அது பிறவாத, மூவாத, இறவாத சாசுவத சத்வடிவம். துரியத்துக்கும் எட்டாத அந்த அதீத அவஸ்தையிலே ஐயங்கள் யாவும் அற்றுப் போகின் றன. உள்ளம் ஒடுங்கி விடுகிறது. ஊழ்வினை ஓய்ந்து போகிறது. ஆன்மா நெடுங்காலம் குடியிருந்த காயம் காய்ந்து போகிறது. மனம் மாய்ந்து போகிறது. அகங்காரம் அழிந்து போகிறது. தித்திக்கும் பிரம் மானந்தமொன்றே திகழ்ந்து நிற்கிறது. கால-தேச-நிமித்தம் யாவும் அந்த நித்திய வஸ்துவினுள் நிராகரிக் கப்படுகின்றன. அண்டங்கள் யாவும் அந்த அவஸ்தை யிலே அழிந்துபோய் விடுகின்றன. எண்ணத்துக்கும் எட்டாத மோனநிலை அது. நிர்விகற்ப சமாதியிலே ஜீவாத்மா பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து

கிடக்கும்போது அது எவ்வாறு உணர்கிறதென்று யார் தான் சொல்லக்கூடும்? அந்நிலையை அனுபவித்தவரே அதன் பெருமையை அறிவர்!

சமாதியிலே அநேக விதமுண்டு. அவை யாவும் பொதுப்பட பாவ சமாதியென்றும் நிர்விகற்ப சமாதியென்றும் இரண்டு விதங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இது பரியந்தம் அனுபவித்து வந்தவைகள் யாவும் பாவ சமாதிகளாம். சில வேளைகளில் அவர் தாமே விரும்பிச் சமாதியில் மூழ்குவார். வேறு சில சமயங்களில் அவரது தூய சுபாவமே அவரைச் சமாதி நிலைக்கு இழுத்துச் செல்லுமாம். ஆனால் இவை யாவும் ஆத்மானுபவத்தின் முடிவான நிலைகளல்ல. மனம் முற்றுமே அற்றுப்போய் நிர்விகற்ப சமாதியடையும்போதுதான் அகண்டாகார அநுபூதி பூர்த்தியாகிறது. இந்த இலட்சியம் எவ்வளவு மேலானதோ அவ்வளவு கடினமானது இதற்குரிய சாதனமும்.

சாதாரண சாதகன் ஒருவன் பூரண நிர்விகற்ப சமாதியடைந்துவிட்டால் அவனுக்குத் திரும்பவும் பிரபஞ்ச வுணர்ச்சி வருகிறதில்லை யென்று பெரியோர் சொல்லுகின்றனர். சமாதியடைந்த சொற்ப நாளைக்குள் அவன் உடலை உகுத்துவிட்டுப் பிரம்மத்தோடு ஐக்கியமாகி விடுகின்றான். உலகத்தை உய்விப்பதற்கென அவதரித்திருக்கும் ஏதோ ஒரு சிலர் மட்டும் இத்தச்சமாதியடைந்த பிறகுங்கூடப் பிரபஞ்ச ஞாபகம் பெறுகிறார்கள். உலக நன்மையின் பொருட்டே அவர்கள் மீண்டும் இவ்வுலகில் வாழ்கிறார்கள். அருள் சக்தியும் பகவத் சம்பத்தும் அவர்கள் மாட்டுப் பெரிதும் மிளிர்கின்றன. இந்த அவதார புருஷர்கள் எண்ணிய மாத்திரத்தில் பக்தி, விவேகம், வைராக்கியம் முதலியன எவர்க்கேனும் அளிக்க முடியும். சாதாரண உலகப் பொருள்களைப் போல் தூய்மை, அருள், முதலியன பிறருக்கு வழங்க இவர்களால் இயலும். இப் பெரியார்களிடத்தி லிருந்து

உதிக்கும் அருள் ஒளி உலகெங்கும் வியாபித்து உயரிய எண்ணங்களையும் நோக்கங்களையும் மக்களனைவர்க்கும் புகட்டி அவர்களை ஈடேற்றுகிறது. ஆதலாலேதான் லௌகிக அந்தஸ்து என்பது சிறிதேனும் அவர்கள் மாட்டு இல்லாதிருப்பினும் அநேக ஆயிரம் ஆண்டுகளாக அவர்கள் புவியெங்கும் போற்றப்படுகின்றனர்.

தக்ஷிணேசுவரத்துக்குத் தோதாபுரி யென்ற மகா புருஷர் ஒருவர் வந்து சேர்ந்தார். ஜகத்குரு சங்கராசாரியார் மரபிலே வந்துள்ள தசநாமிகள் அல்லது பத்து விதப் பெயர்கள் பூண்டுள்ள பரமஹம்ஸ சந்நியாசிகளுள் 'புரி' யென்னும் பட்டம் தரித்துள்ள பிரிவைச் சார்ந்தவர் இவர். நருமதை நதிக்கரை யோரத்தில் இவர் நாற்பது வருஷகாலம் கடுந்தவம் புரிந்து நிர்விகற்ப சமாதியடைந்தவர். இந்த ஜீவன் முக்தர் தமது பிராரப்த கருமம் ஓயுமளவும் புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை பண்ணி வந்தார். வேதாந்தகேசரிபோல நாடெங்கும் உலாவித் திரிந்த இவர் மூன்றிரவுக்குமேல் ஓரிடமும் தங்குவது கிடையாது. கங்கா சாகரம் சென்று திரும்பி வந்த தோதாபுரி, அரும்பெரும் காரியமொன்று ஆற்றுதற்கெனத் தெய்வாதீனமாக ஏவப்பட்டு, தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்தார்.

கோயில் வாயிலில் அமைதியாக உட்கார்ந்திருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்தவுடனே அவரது பக்குவ நிலையைத் தோதாபுரி அறிந்துகொண்டார். சிறிது நேரம் அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரை வியப்புடன் உற்றுப் பார்த்துவிட்டு அவர் அருகிற்போய், "முதிர்ந்த பக்குவம் அடைந்தவனாக நீ காணப்படுகிறாய். அத்வைத சாதனை கற்றுக்கொள்ள உனக்கு விருப்பமா?" என்று [illegible]ர்.

"எனக்கு ஒன்றும் தெரியாது. எல்லாம் அன்னையின் திருவுளப்படி ஆகுக. அவள் உத்தரவின்றி நான் எதற்கும் இணங்கேன்" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆவல் இல்லாமல் மறுமொழி பகர்ந்தார்.

"சரி, அவளைப் போய் கேட்டுவா: நான் இங்குப் பலநாள் தங்கமாட்டேன்" என்றார் புதிதாக வந்த சந்நியாசி.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் பேசாது சந்நிதி சென்று அம்பிகையின் விருப்பம் யாதோவென்று வேண்டி நின்றார். பரவச மடைந்திருந்த அவருக்கு அன்னை, "ஆம் பிள்ளாய், அத்வைத வேதாந்தமும் கற்றுக்கொள். உனக்கு அதைப் புகட்டுதற்கெனவே அவர் இங்கு வந்திருக்கிறார்" என்று அருள்புரிந்தாள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் திரும்பிப்போய்த் தமக்கு அனுமதி கிடைத்துவிட்டதென்று சொல்லியபோது, அந்தப் பெரியாருக்கு இவரது களங்கமற்ற குழந்தைச் சுபாவத்தைப் பார்த்து வியப்பும், சக்தியின் அருளில் இவர் வைத்திருந்த நம்பிக்கையைப் பார்த்து நகைப்பும் உண்டாயின. ஈசுவரன் அல்லது சகுணப் பிரம்மம் என்பதும் பராசக்தி என்பதும் மாயையின் கூறுபாடுகளாதலால் அவை அஞ்ஞானத்தில் தோன்றி அஞ்ஞானத்தோடு அழிகின்றன வென்பது தோதாபுரியின் கொள்கை. தான் கற்பித்துக்கொண்ட அஞ்ஞானத்தை ஜீவன் தன் முயற்சியால் அகற்ற வேண்டுமே யொழிய ஈசுவரன் அல்லது சக்தியின் வரத்தை வேண்டுவது அறியாமை யென்பதும் அவரது சித்தாந்தம். ஆனால் அவர் இதைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் ஒன்றும் சொல்லவில்லை. ஞானம் உதயமாகும்போது இந்தக் குருட்டு நம்பிக்கை இயல்பாகவே அற்றுப் போய்விடுமென்று அவர் எண்ணியிருந்தார்.

வைதிக விதிப்படி சந்நியாசம் ஏற்றுக்கொள்ள ஸ்ரீ ராமகிருஷ்ணர் இணங்கினார். பிறப்பு இறப்பு இரண்டையும் அறுத்தலின் அறிகுறியாக இந்தச் சடங்கைச் செய்து முடிக்க ஒரு நல்ல நாள் குறிப்பிடப்பட்டது. அன்றைய தினம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபவாச விரதம் இருந்தார். குலம், குடி யாவையும் அன்று முதல் அவர் நீத்து விடுகிற

படியால் தமது மூதாதைகளுக்குத் தாம் செய்யக் கடமைப் பட்டிருந்த சிரார்த்தச் சடங்கைச் சிரத்தையுடன் அன்று கடைசியாகச் செய்து முடித்தார். தமது பிதிர்கள் எவ்வுலகில் இருப்பினும் அவர்களுக்குச் சாந்தி யுண்டாகுகவென்று வேண்டிப் பிண்டம் படைத்தார். இன்னும் இம்மையிலிருந்த தமது இனத்தாருக்குத் தாம் செய்தற்குரிய கடமைகளை சந்நியாசம் பூண்டபின் தம்மால் செய்ய இயலாது போய்விடுமாதலால், அந்தப் பொறுப்பை விஷ்ணு பகவானிடம் ஒப்புவித்தார். கடைசியாகத் தமக்கென இம்மை மறுமைகளாகிய எவ்வுலகும் வேண்டியதில்லை என்பதற்கு அறிகுறியாகத் தமக்கே ஆத்மபிண்டம் அளித்துக்கொண்டார். பிறகு அன்று பகல் முழுதும், இரவு முதல் மூன்று ஜாமமும் ஜப தப தியானங்களில் கழிக்கப்பட்டன. நான்காம் ஜாமத்தில் பிரம்ம முகூர்த்தத்திலே பஞ்சவடியில் ஒரு குடிசையில் குருவும் சிஷ்யனும் கூடினார்கள். வேள்வித் தீ மூட்டி அதில் விரஜா ஓமம் செய்தார்கள்.

ஓமச் சடங்குகள் முடிந்ததும், உடற்கூற்றை எரித்துவிட்டதற்கு அறிகுறியாக அக்னியின் வடிவாகிய காவியுடையைச் சிஷ்யனுக்கு அளித்து, பிரம்மோபதேசம் செய்வதற்கு அவரைத் தம் முன்னிலையில் உட்கார வைத்தார் தோதாபுரி. இதற்குள்ளாக விடியற்காலமும் வந்துவிட்டது. புலருதற்கிருந்த அந்தப் புதுநாள் போற்றுதற்கு உரிய ஒரு பெருநாள் அன்றோ! பொதுவாக உலகுக்கும் சிறப்பாக இந்தியாவுக்கும் புத்துயிர் அளிப்பதற்கிருந்த திருநாள் அதுவாகும். ஆதியந்தமிலா அறநெறியாகிய வேதாந்தத்தை உலகெங்கும் புதிய முறையில் புகட்டும் போதகர் ஒருவர் அன்று நியமிக்கப்பட்டார். புத்தரது கருணையும் சங்கரரது நுண்ணறிவும் இப்பெரியார் மாட்டு ஒருங்கே மிளிர்ந்திருந்தன. நாகரிகத்தில் ஒன்றுடன் ஒன்று ஒவ்வாத மேல்நாடு கீழ்நாடு இரண்டையும் இணை சேர்க்கும் கடமையை மேற்கொள்ள இவர் தோன்றினர். நவீன வாழ்வு முறையைப்

புராதன பாரமார்த்திக நோக்கத்துடன் பொருத்திவைத்ததும் இவரது அருட்பாரமாயிற்று. இப்புண்ணிய காலத்தில் சிஷ்யருக்குப் பிரம்மோபதேசம் செய்து அகண்டாகார பிரம நிஷ்டை புரியும்படி தோதாபுரி பணித்தார்.

கரணங்கள் யாவையும் நீத்து உட்செல்லுதல் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு எளிதாயிருந்தது. ஆனால் அவர் முடிவாகக் கண்டது பராசக்தியின் திவ்விய, தேஜோமய, சின்மய வடிவமேயாம். அவளைத் தவிரத் தாம் வேறு எதையும் காணவில்லை யென்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். தோதாபுரிக்கு இம்மொழி சிறிது பதைபதைப்பை உண்டாக்கிற்று, "விவேகம் என்னும் வாளால் அவளை வெட்டித் தள்ளி அப்பால் செல்" என்றார் அவர். அவ்விதமே செய்து பார்த்த ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு, அன்னையின் வடிவத்துக்கு அப்பாலுள்ளது வெறும் பாழ் என்று காணப்பட்டது. தம்மையும் காணமுடியாத சூனியந்தானே அப்பாலுள்ளதென்று அவர் பரிதாபகரமாகத் தம் குருவிடம் தெரிவித்தார். இக்கூற்றைக் கேட்ட தோதாபுரி அவரது நெற்றியிற் குறியிட்டு மனதை அங்கு நிலைநிறுத்தும்படி சொன்னார். வெறும் பாழ் புலப்படும் போது ஞான விளக்கேற்றி அதையும் கடந்து போம்படி சிஷ்யனுக்கு அவர் விளக்கிக் காட்டினார். அவ்விதமே செய்த ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு நிர்விகற்ப சமாதி கைகூடியது. மூச்சுப் பேச்சு எல்லாம் அடங்கிவிட்டன. அவர் உடல், சிலைபோல அசைவற்றிருந்தது. அகண்டாகார பிரம்மத்தில் அவர் ஐக்கியமாகிவிட்டார்.

இவற்றையெல்லாம் அமைதியுடன் பார்த்துக்கொண்டிருந்த தோதாபுரி சந்தடி செய்யாது குடிசையைவிட்டு வெளியே வந்து கதவை மூடிப் பூட்டி விட்டார். இவ்விதம் ஒரு நாள்—இரண்டு நாள்—மூன்று நாள் கழிந்தன. ஆனால் அவர் எதிர்பார்த்த வண்ணம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதி கலைந்து அவரைக் கூப்பிட்டபாடில்லை. தோதாபுரிக்குப் பெரும் வியப்பு உண்டாயிற்று. கதவைத் திறந்து

அவர் குடிசைக்குள்ளே போனார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அதே நிலையில் உட்கார்ந்திருந்ததை அவர் பார்த்தார். உயிரின் அறிகுறி எதுவும் அவரது உடலில் காணப்படவில்லை. ஆனால் அவர் முகத்தில் மட்டும் ஒளி வீசிக்கொண்டிருந்தது. இந்த அற்புதக் காட்சியைத் தோதாபுரி வியப்புடன் நோக்கினார். "நான் நாற்பது வருஷம் பயின்ற பின் பெற்ற நிர்விகற்ப சமாதியை இவன் ஒரே நாளில் பெறக்கூடுமா?" என்று அவர் ஐயமுற்று அருகிற் போய்ப் பார்த்தார். இதயம் துடிப்பது நின்றிருந்தது. சுவாசப் போக்கு வரவு அறவே இல்லை. நிர்விகற்ப சமாதியின் லட்சணங்கள் யாவும் காணப்பட்டன. "சங்கர மஹாதேவ! இக்காட்சி அரிதிலும் அரிது!" என்று அடங்கா அகமகிழ்ச்சியுடன் அவர் அலறினார். நிர்விகற்ப சமாதியிலே அத்வைத சித்தி ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குக் கிட்டிவிட்டது.

எவ்விதத்திலாவது சமாதியைக் கலைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பிரபஞ்ச உணர்ச்சி வரச் செய்வதற்கான முயற்சிகளை இப்போது தோதாபுரி கையாண்டார். "ஹரி ஓம்" என்னும் மந்திரத்தை திரும்பத் திரும்ப அவரது காதில் ஓதினார். சிறிது சிறிதாகப் புறவுணர்ச்சி பெற்றெழுந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் குருநாதர் கிருபா நோக்கத்துடன் தம்மெதிரே நிற்பதைக் கண்டார். என்ன கைம்மாறு செய்வதென்று அறியாத சிஷ்யர் தோதாபுரியின் தாளிணையில் வீழ்ந்து வணங்கினார். குருவும் சிஷ்யனைத் தூக்கி எடுத்து அன்புடன் கட்டி அணைத்துக் கொண்டார். மூன்று இரவுக்கு ஓரிடம் தங்காத தோதாபுரி பதினொரு மாத காலம் இந்த அற்புத சிஷ்யருடன் வசிக்கலானார்.

தோதாபுரி சுவாமிகள் சிறு வயதிலேயே துறவறம் பூண்டவர். அறிவும் ஆற்றலும் அதிகம் வாய்க்கப் பெற்றவர். சுமார் எழுநூறு சந்நியாசிகள் இருந்த ஒரு மடத்துக்கு அவர் கொஞ்சகாலம் அதிபதியாக இருந்தவர்.

துன்பம் என்பதே இன்னதென்று அறிந்திலர். வாழ்வு அனைத்தும் இன்பகரமாகவே அவருக்கு இருந்து வந்தது. தன் முயற்சியால் மனிதன் ஒருவன் பிரம்ம ஞானம் உட்பட எல்லா நன்மைகளையும் தேடிக்கொள்ள முடியுமென்பது அவரது கொள்கை. ஆதலால் துன்பம் துய்ப்பவர்கள் மாட்டு அவர் இரங்கி அனுதாபம் காட்டமாட்டார். சிலருக்கு அந்தமிலா அல்லலும் வேறு சிலருக்குத் துன்பமிலா இன்பமும் அளிக்கும் அநிர்வசனீய மாயாசக்தியொருத்தி இருக்கிறாள் என்பதில் ஞானகுருவாகிய தோதாபுரிக்கு நம்பிக்கையில்லை. தம்மை ஆதரித்து வருபவள் பராசக்தி யென்பதை அவர் உணரவில்லை. ஆதலால் மனிதனது சுயேச்சை, சுயப் பிரயத்தனம் இவைகளைப்பற்றிய உண்மையை அவருக்குப் புகட்டுவதற்கெனவே ஜகன்மாதா அப்பெரியாரை தக்ஷிணேசுவரத்தில் அவ்வளவு காலம் அமர்த்தி வைத்திருந்தாள் போலும்!

வேதாந்த விஷயங்களைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தோதாபுரி சுவாமிகளும் நெடுநேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். சில வேளைகளில் சில நுட்ப விஷயங்களைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்து அப்பெரியார் தெரிந்து கொள்ள நேரிடும். மாயா சக்தியின் வன்மையைப்பற்றி மட்டும் இருவருக்குள்ளும் அபிப்பிராய பேதமிருந்து வந்தது. தோதாபுரி சுவாமிகள் தீ மூட்டி அதன் அருகில் அமர்ந்துகொண்டு நெடுநேரம் தியானம் செய்வது வழக்கம். இந்த வழக்கத்திலிருந்து அவர் என்றைக்கும் தவறியது கிடையாது. பிரம்ம ஞானியாகிய அவர் ஏன் தியானம் முதலிய சாதனங்களில் அவ்வளவு கருத்தா யிருக்க வேண்டுமென்று ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேட்டார். தோதாபுரி தம்மிடத்திருந்த ஒரு பித்தளைக் கமண்டலத்தைக் காட்டி "இதைத் தினந்தோறும் துலக்காவிட்டால் ஒளி மழுங்கிப்போம்; மனமும் அதுபோன்றது" என்றார். "ஆனால் பொன் கமண்டலத்தைத் தினந்தோறும் துலக்க வேண்டியது அவசியமல்லவே!" என்றார் ஸ்ரீ ராம

கிருஷ்ணர். பின்னர், ஒருவர் கூற்றை ஒருவர் மெச்சி மகிழ்ந்தார்கள். அவர்கள் மனங்களும் பித்தளையும் பொன்னும் போன்றவை போலும்!

தாம் வளர்த்த தீயை ஞானாக்னியின் வடிவெனப் பாராட்டுவது தோதாபுரியின் வழக்கம். ஒருநாள் இருவரும் தீயண்டை அமர்ந்து பேசிக் கொண்டிருந்தபோது கோயில் வேலையாள் ஒருவன் அவர்களிடையே போய்க் கொள்ளிக்கட்டை ஒன்றை எடுத்துச் சுருட்டுப் பற்ற வைத்தான். பரிசுத்த அக்னியை அவன் அவ்வாறு உபயோகித்ததைப் பார்த்த தோதாபுரிக்குக் கோபம் மூண்டுவிட்டது. வேலையாளை அவர் பலமாகக் கடிந்து கொண்டதுமல்லாமல் அவனைப் புடைத்துவிடுபவர் போலவும் பயமுறுத்தினர். இக் காட்சியைக் கண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர் விலாவலிக்க விழுந்து விழுந்து சிரித்தார். தமது சிஷ்யரின் விபரீத நடத்தையைப் பார்த்த பெரியார் "ஏன் இப்படிச் சிரிக்கிறாய்? இவன் செய்தது தப்பல்லவா?" என வினவினர். "ஆம், ஆனால் நான் தங்களது ஞானத்தின் ஆழத்தைச் சோதித்துப் பார்த்தேன். இப்போதுதான் 'பிரம்மம் ஒன்றே சத்தியம்; தோன்றிய யாவும் அந்த பிரமத்தின் திரிபு' என்று சாதித்தீர்கள். அடுத்த கணத்திலேயே அவற்றை யெல்லாம் மறந்துவிட்டு மனித சொரூபமான அந்த பிரம்மத்தை அடிக்கப் போகிறீர்கள். மாயா சக்தியின் வன்மையைப் பார்த்து நான் நகைக்கிறேன். அவள் யாரைத்தான் ஏமாற்றிவிடமாட்டாள்!" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இதற்கு என்ன மறுமொழி சொல்வதென்று தெரியாது தோதாபுரி திகைத்து நின்றார்.

மாயையின் அநிர்வசனீய வன்மையைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லியதாவது:— "பரப்பிரம்மங்கூட அவளால் கட்டுண்டு பதைக்கிறது. முள் ஏது? வலி ஏது? என்று நீ விசாரம் செய்கிறாய். ஆனால் எதிர்பாராது திடீரென்று முள் ஒன்று கையில் தைத்தால்

ஓ வென்று கதறுகிருய். அதுபோல நீயே பிரம்மமென்றும், உனக்குப் பிறப்பேது, இறப்பேது, பசி தாகமேது என்றும் விசாரம் செய்யலாம். ஆனுல் அடுத்த கணத்தில் உடலுக்கு ஏதாவது பிணியோ, மனதில் ஏதாவது மோகமோ கோபமோ வந்துவிட்டால் தத்துவ ஞானம் பறந்து விடுகிறது. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் இடையே மாயா சக்தி இருக்கிருள். அவள் விலகி நின்று அநுக்கிரகம் செய்யாவிடில் ஜீவனுக்குப் பரமாத்மா தரிசனம் கிடையாது. அவளது அருளைப் பெருது எவ்வளவு தான் ஆத்ம விசாரம் செய்தபோதிலும், "இது அன்று அது அன்று" என்னும் நேதி விசாரணை செய்த போதிலும் பயனில்லை."

தோதாபுரிக்குப் பக்தி மார்க்கத்தில் நம்பிக்கை கிடையாது. மனதை ஒருமைப் படுத்துவதற்குப் பக்தியும் ஒரு சிறந்த உபாயம் என்பது அவருக்குத் தெரியாது. வெறும் பக்தியைக்கொண்டே அத்வைத நிலை யடைந்து முக்தி பெறலாம் என்பதை அவர் ஒருபோதும் ஒத்துக் கொள்ள மாட்டார். பிரார்த்தனை, தோத்திரப் பாக்கள், ஜபம் முதலியவைகள் பயனற்றவைகளென அவருக்குத் தோன்றின. எனினும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கசிந்துருகிப் பாடினதைக் கேட்ட மாத்திரத்தில் அவரது கண்களில் தம்மை யறியாமலே கண்ணீர் பெருகிவிடும்.

தக்ஷிணேசுவரத்தில் வந்திருந்தபோது தோதாபுரியின் தேகக்கட்டு சிறிது சிறிதாகக் குலைந்து வந்தது. அஜீரணம் தோன்றி முடிவில் வயிற்றுக் கடுப்பு வந்துவிட்டது. ஆகாராதிகளில் அவருக்குச் செய்யவேண்டிய சௌகரியங்களை யெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்து வைத்தார். நல்ல மருத்துவர்களைக் கொண்டு எத்தனையோ சிகிச்சைகளை மதுராநாதர் கையாண்டு பார்த்தார். ஆனுல் நோய்மட்டும் குறைந்தபாடில்லை. நாளேற ஏற வயிற்றுவலி அதிகரித்தது. தோதாபுரி சுவாமிகளுக்குத் தியானம் செய்ய முடியாமற் போய்விட்டது. மனதை உயர் நிலைக்குக் கொண்டுபோக வொட்டாது உடல் வேதனை அவரை வாட்டி வந்தது. ஆதலால் அப்

பெரியார் தம் உடலிடம் அலுப்புக் கொண்டார்; இப் புழுக்கூட்டுடன் போராடுவதைக் காட்டிலும் மனதைப் பிரம்மரந்திரத்தில் நிறுத்திக்கொண்டு அதைக் கங்கையி னுள் உகுத்து விடுவது நலமென்று அவர் தீர்மானித்தார். தாம் பிரம்மம் என்று அறிந்தபின் பொய்யான உடலைப் போற்றி வைப்பது எதற்காக? எனவே பிரம்ம சாக்ஷாத் காரத்தில் மனதை உறுதிப் படுத்திக்கொண்டு அந்த ஞானியார் கங்கையினுள் பிரவேசித்தார். என்ன அதி சயம்! அன்றிரவு கங்கை வற்றிப்போய் விட்டதோ? நதி யைக் கடந்து அக்கரை போய்விட்டார். புகைக்கப்பல் போகும் அவ்வாற்றில் அன்றிரவு அவரது மூன்றரை முழ உடலை மூழ்குவிப்பதற்கான நீர் இல்லாது போய் விட் டது! "இதென்ன மாயை?" என்று தோதாபுரி வியந் தார். உடனே தமது அறிவை மூடியிருந்த திரை யொன்று நீங்கினாற் போல ஒரு காட்சி கண்டார். தோன் றிய யாவும் எல்லாம் வல்ல பராசக்தியின் சொரூபமாக அவருக்குப் புலப்பட்டன. நீர் ஆனதும் சக்தி; நிலம் ஆனதும் சக்தி; உடலாய் உலவினதும் சக்தி; உள்ள மாய் எண்ணினதும் சக்தியே. இன்பம் துன்பம் இரண்டும் சக்தியின் வடிவம். ஞானமும் அஞ்ஞானமும் சக்தி சொரூபங்களே. வாழ்வும் சக்தி; மரணமும் சக்தி. பார்த்த, கேட்ட, எண்ணின யாவும் சக்தியின் வடிவங் களே யாம். பராசக்தி விரும்பிய மாத்திரத்தில் உளது இலதாயும், இலது உளதாயும் மாறுகின்றன. தேகம் எடுத்த எந்தப் பிராணியும் அவளது எல்லைக்கு மீறி நடக்க முடியாது. தன் இஷ்டம் போலச் சாவதற்குங் கூட ஒருவனால் இயலாது. இச்சக்தியே சிவமாய் அல் லது குணம் குறியிலாப் பிரம்மமாய் இருக்கிறாள் என் பதும் அப்பெரியாருக்கு அப்போது விளங்கியது. பிரம் மமும் மாயா சக்தியும் இருவித நிலைமைகளுடன் இருக் கும் ஒரே வஸ்துவாம்.

ஜகன்மாதாவாகிய பராசக்தியை அந்த நள்ளிரவில் தோதாபுரி சுவாமிகள் பக்தியுடன் சரண் புகுந்தார்.

அவளருளாலே அவளை வணங்கியவராய்த் திரும்பவும் கங்கை நதியைக் கடந்து தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்தார். அதன் பிறகு வயிற்றுவலி தம்மை அதிகம் வாட்டியதாக அவர் உணரவில்லை. மறுநாட் காலையில் அவரது க்ஷேமம் விசாரிக்க வந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர் முற்றிலும் மாறுபட்டிருந்ததைக் கண்டார். நோயின் அறிகுறிகளுக்குப் பதிலாகத் தோதாபுரியின் முகத்தில் ஆனந்தம் ததும்பியது. தமது அருமைச் சிஷ்யரை அண்டையில் அமர்த்திக்கொண்டு அப்பெரியார் நிகழ்ந்தன யாவையும் நவின்றார். பிணி வந்து தம்மைப் பிடித்ததெல்லாம் முடிவில் தமக்கு நன்மை பயப்பதற்காகத்தான் என்று அவர் கூறினார். "நான் எத்தனையோ தடவை இவ்விடத்தை விட்டு வெளியேக முயன்றும் என்னால் முடியாது போய்விட்டது. மகா மாயை தன் பெருமையை எனக்கு அறிவுறுத்தற் பொருட்டே என்னை இங்கும் வைத்திருந்தாள் போலும்! நல்லது இப்போது அவளது அனுமதியைப் பெறுவோம் வா" என்றார் தோதாபுரி, பரிவ்ராஜக பரமஹம்ஸ ஆசாரியர். அவ்விதமே அவரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தேவியின் சந்நிதி சென்று வழுத்தி நின்றபோது தோதாபுரி சுவாமிகள் புறப்பட்டுப் போதற்கு அவள் அனுமதி தந்துவிட்டாளென இருவரும் உணர்ந்தார்கள். சுவாமிகள் இரண்டொரு நாளில் தமது அருமைச் சிஷ்யரையும், தேவியின் சிறந்த உறைவிடமாகிய தக்ஷிணேசுவரத்தையும் விட்டுப் பிரிந்து வெளியேகினார்.

மாயா சக்தியின் மகிமையை முற்றும் மறுத்து வந்த சுத்த அத்வைத வேதாந்தியாகிய தோதாபுரி சுவாமிகள் தக்ஷிணேசுவரத்தில் கற்றுக்கொண்ட படிப்பினையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கீழ் வருமாறு விவரித்துள்ளார்:— "பரம்பொருள் அசைவற்று, படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய தொழில் ஏதும் செய்யாதிருக்கும்போது அது சிவம் என்றும், புருஷன் என்றும், நிர்க்குணப் பிரம்மம் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் அதே வஸ்து

விகாரப்பட்டு, முத்தொழிலையும் ஆற்றும்போது சக்தி யென்றும், மாயை யென்றும் பிரகிருதி என்றும், ஈசுவரன் என்றும் அழைக்கப்படுகிறது. சிவமும் சக்தியும், பிரம்மமும் மாயையும், நிராகார வஸ்துவும் சாகார வஸ்துவும் வேறுபட்டிருப்பதெல்லாம் வெறும் பேச்சளவே யொழிய, வாஸ்தவத்தில் புருஷனுக்கும் பிரகிருதிக்கு மிடையே வேற்றுமை கிடையாது. பாலும் அதன் வெண்மை நிறமும்போல நிர்குணமும் சகுணமும் ஒரே வஸ்துவில் இணை பிரியாது இருப்பவை யாகும். வெண்மை நிறத்தோடொட்டி யல்லாது பால் இன்னதென்று யாராலும் கிரகிக்க முடியாது. மாணிக்கமும் அதன் ஒளியும் போன்றவை நிர்குணமும் சகுணமும். ஒளியினின்று வேருக மாணிக்கமில்லை. பிரம்மத்துக்கும் பராசக்தியாகிய ஜகன் மாதாவுக்கும் இடையே யுள்ள இணக்கமும் இவை போன்றதே."

## ஒன்பதாம் அத்தியாயம்

## அநுபூதியும் சமரசமும்

தோதாபுரி சுவாமிகள் தக்ஷிணேசுவரம் விட்டு ஏகிய பின்பும் அகண்டாகார நிலையிலே லயித்திருக்க ஸ்ரீ ராமகிருஷ்ணர் விரும்பினுர். ஆதலின் தேகத்தைப் பற்றிய எண்ணங்கள் யாவும் அவரது உள்ளத்தினின்று நழுவிப் போயின. அவர் எய்தியிருந்த நிலை இத்தகையதென்று சொல்லொணுததாகும். நான் நீ, ஞாதா-ஞேயம் என்கிற பேதபுத்தி அவரிடமிருந்து அடியோடு விலகி விட்டது. ஒன்றென்றும் பலவென்றும் உணரும் அறிவு அளவுக்கடங்காத சிதாகாயத்திலே மறைந்து போயிற்று. பந்தமென்பதும் மோக்ஷமென்பதும் அவருக்கில்லை யாயின. சொல்லுதற்கு அரிய சாந்தமும் பேரின்பமும் கூடிய உயர்நிலை அவர் எய்தியிருந்தார்.

பரமாத்மா விகாரமின்றித் தன்மயமாயிருந்த மௌன நிலையும் அதுவேயாம். வெளிப் பார்வைக்குச்செத்த பிணம்போற் கிடந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆத்ம சாக்ஷாத்கார மெய்தியிருந்தா ரென்பது அப்போது தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருந்த சந்நியாசி ஒருவருக்கு மட்டும் தெரிய வந்தது. இந்தப் பரமஹம்சரது உடம்பினை எவ்விதத்திலாவது காப்பாற்றினால் அது உலகத்தவருக்கு மிகப் பயன்படும் என்றெண்ணி அவ்வாறே அவர் செய்யத் துணிந்தார். அசைவற்றுக் கிடந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் வாயினுள் பலவந்தமாக அவர் உணவைத் திணிப்பார். தேகவுணர்ச்சி வருவித்தற் பொருட்டு அவரைச் சில வேளைகளில் கழியால் அடிப்பார். இவ்வாறெல்லாம் செய்தும் சிற்சில வேளைகளில் உணவூட்ட முடியாமற் போய்விடும். ஸ்ரீ ராமகிருஷ்ணரது உடலின் மீது பறவைகள் உட்கார்ந்தன; பாம்புகள் ஊர்ந்து சென்றன. ஈ எறும்பு முதலியன அவரது நாசித் துவாரங்களிலும் வாயிலுள்ளும் புகுந்தன. ஆறுமாத காலம் இவ்வாறு கழிந்தன. பிறகு உலக நன்மையை முன்னிட்டு சாகாரம், நிராகாரம் இரண்டுக்குமிடையே இருக்கும்படி ஜகன்மாதா பணித்ததை ஸ்ரீ ராமகிருஷ்ணர் உணர்ந்தார். திரும்பவும் தமக்கு உடல் ஞாபகம் நன்கு வருவிக்கும் பொருட்டு ஆறுமாத காலம் ஆற்றொணு வயிற்றுக் கடுப்பும் வலியும் தம்மீது தேவி சுமத்தின தாகவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லி யிருக்கிறுர். இவ்வாறு பிணிவாய்ப்பட்ட பின்பு தான் இவருக்கு உலகப் பிரக்ஞை நிலைத்து நின்றது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் அத்வைத அனுபூதி பெற்றபின் எய்தியிருந்த பரந்த நோக்கமும், சர்வமத சமரசக் கொள்கையும் நாம் நன்கு சிந்திக்கற்பாலன வாகும். பெரியோர்கள் கண்ட மதங்கள் யாவும் ஒரே பரம்பொருளை அடைதற்கான நானுவித மார்க்கங்களே என்பது அவரது போதனை. இக்கொள்கையை அவர் தாமே அனுஷ்டித்து மெய்ப்பித்துக் காட்டினுர். மகம்மதிய மதத்திலே சூபி

வகுப்பைச் சார்ந்த சந்நியாசி ஒருவர் தக்ஷிணேசுவரத்துக்கு வந்திருந்தார். அவர் அங்கு வசித்துவந்தபோது அவரது பெருமையும் ஈசுவர பக்தியும் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு நன்கு தெரியவந்தன. ஆதலின் அப்பெரியார் கைக்கொண்டிருந்த இஸ்லாமிய மார்க்கத்தைத் தாமும் பின்பற்றிப் பார்க்க வேண்டுமென்ற அவாவுண்டாயிற்று. ஸ்ரீ ராமகிருஷ்ணர் விரும்பிய விதம் அப் பெரியாரும் அவருக்கு இஸ்லாமிய தீக்ஷை தந்தருளினார். பரமஹம்ஸர் இப்புதிய மதத்தில் தமது இயல்பின்படி முழு மனதுடன் ஈடுபட்டார். அதைப்பற்றி அவர் சொல்லியதாவது :—"நான் அப்போது அல்லாவின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டே யிருந்தேன். முஸ்லீம்களைப் போலவே உடை தரித்துக்கொண்டு குறிப்பிட்ட வேளைகளில் ஒழுங்காக நமாஸ் சொல்லி வந்தேன். இந்துமத சம்பந்தமான எண்ணங்கள் யாவும் அப்போது என் உள்ளத்தை விட்டு அகன்றிருந்தன. இந்து தேவதைகளைப் போற்றவும் அவைகளின் தரிசனம் காணவும் எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. இவ்வாறு நான் பயின்ற சொற்ப நாளைக்குள் அம்மதத்தின் முடிவான நிலையை எய்தினேன்." நீண்ட தாடியும் கம்பீர தோற்றமுமுடைய ஒரு திவ்விய உருவத்தை அவர் முதலிலே கண்டார். ஒருவேளை அது மகம்மது நபியின் உருவமாயிருக்கலாம். பிறகு அந்த உருவம் சகுணப்பிரம்மமாக மாறி அதுவே திரும்பவும் நிர்குணப் பிரம்மம் ஆயிற்று.

பரமஹம்ஸர் இஸ்லாமிய சாதனம் பயின்றது, வருங்காலத்தில் பாரத நாட்டுக்கே பெரும்பயன் விளைவிக்கும் போலும். கொள்கையிலும் மனப் போக்கிலும் மகம்மதியர்களுக்கும் இந்துக்களுக்கு மிடையே உள்ள பெரும் வேற்றுமையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் செவ்வனே அறிந்திருந்தார். ஆயினும் அவர் இஸ்லாமிய மதமும் பயின்று அநுபூதி பெற்றதிலிருந்து, இந்த இரு மதங்களுக்கும் இடையே உள்ள பிணக்கு அனாவசியமான தென்றும், அது விரைவில் ஒழிந்துபோய் ஒற்றுமையும் அன்பும்

உண்டாதல் வேண்டுமென்றும் பாரத மக்களுக்குப் படிப்பிணையாதல் கூடுமோ? இந்தச் சாதனத்தின் உடகருத்து காலாந்தரத்தில் நன்கு விளங்கலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாம் பிறந்த இடமாகிய கமார்ப்புகூருக்குச் சென்று நெடுநாள் ஆய்விட்டது. இப்போது அவர் தேக சௌக்கியம் கெட்டிருந்தமையால் கிராமவாசம் செய்ய வேண்டியதும் அவசியமாயிருந்தது. ஆதலால் 1867-வது ஆண்டில் ஹிருதயரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு அவர் தாம் பிறந்த ஊருக்குச் சென்றார். இவரது மனப்போக்கைப் பற்றிப் பலவாறாகக் கேள்விப்பட்டிருந்த கிராம வாசிகள் ஆவலுடன் இவரைப் பார்க்கவந்து சூழ்ந்தார்கள். ஆனால் எவ்வித விபரீதமும் இவர்பால் இல்லாதது கண்டு அவர்கள் மகிழ்ந்தார்கள். எல்லா நற்குண நல்லொழுக்கமும் முன்போலவே இவரிடம் திகழ்ந்தன. அவற்றுடன் புதிதாக இவர் மாட்டுப் பிரகாசித்த பேரருளையும் மகிமையையும் அவர்கள் கண்டு பெரிதும் பயபக்தி கொண்டார்கள். இவரை அணுகின மாத்திரத்தில் துயரம் சஞ்சலம் யாவும் அகன்று போய் ஆனந்தமும் சாந்தமும் உதித்தன. ஆதலால் பெருங் கூட்டம் எப்போதும் இவரைச் சூழ்ந்திருந்தது.

சாரதா தேவியார் இதுபரியந்தம் தம் தந்தையுடன் ஜயராம்பாடியில் வாழ்ந்திருந்தார். இப்போது கமார்ப்புகூருக்கு அழைத்து வரப்பட்டார். மணம் புரிந்த காலத்தில் ஆறு வயதுச் சிறுமியாயிருந்த இவர் அப்போது தம் நாதரின் பெருமையை அறிந்துகொள்ள இயலவில்லை. தற்போது பதினான்கு பிராயம் அடைந்து அறிவு முதிர்ந்திருந்த தேவியார் சொற்ப நாளைக்குள் தம் தலைவரின் மகிமையை நன்கு தெரிந்து கொண்டார். ஆதலின் அவர் தம் உடல், உள்ளம் யாவையும் தம் கணவர்மாட்டு ஒப்புவித்துத் தம் நல் வாழ்வுக்கு அவரது துணையை நாடி நின்றார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பெற்றிருந்த பாரமார்த்திகச் செல்வத்தில் சுதந்திரம் பாராட்ட அவரை மணம்புரிந்த

தேவிக்கு முதல் உரிமை உண்டன்றோ? பரமஹம்ஸ தேவரும் தமது பொறுப்பை நன்கு உணர்ந்து தூய்மையே உருக்கொண்ட தம் தர்ம பத்தினியைப் பாரமார்த்திகத்திலும் லௌகிக வாழ்வு முறையிலும் பயிலுவிக்க ஏற்றுக் கொண்டார். கடவுளை நம்பி இருத்தலே வாழ்வின் முக்கிய நோக்கமென்றும், இடம் பொருள் ஏவலுக்கு ஏற்றவாறு வீட்டுக் காரியங்களை இன்னின்ன விதமாக நடத்தவேண்டும் என்றும், உற்றார் உறவினருடன் அவர்களது முதுமை இளமைக்குத் தக்கபடி இன்னின்ன விதமாக நடந்துகொள்ள வேண்டும் என்றும், விருந்து ஓம்பும் விதம் இன்னதென்றும் போதித்ததுடன், வாழ்க்கைக்கு இன்றியமையாத இன்னும் பல பயிற்சிகளையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவருக்கு அளித்து வந்தார். இத் தம்பதிகளுக்குள்ளே இருந்து வந்த சம்பந்தம் ஆத்மார்த்தமானதே ஒழிய அணுவளவும் உடலோடு ஒட்டியதல்லவென்பதைச் சொல்லவேண்டியதே யில்லை. தோன்றிய யாவும் பரம்பொருளின் வடிவே யல்லாது வேறல்லவென்று அநுபூதி வாயிலாக அறிந்திருந்த பரமஹம்ஸருக்கு மனையாளை உடல் சம்பந்தத்துக் குரியவளெனக் கருதும் அஞ்ஞான எண்ணம் வருவதற்கு இடமும் உண்டோ?

சுமார் எட்டு மாத காலம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கமார்ப்புகூரில் வாசம் செய்தது அவரது உடலுக்குப் பெருநலம் விளைவித்தது. பிறகு ஹிருதயருடன் அவர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பினார். வழியில் ரயில் நிலைய மொன்றில் வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தபோது, அருகே நெல்வயலில் சிவபெருமானுக்குப் பிரீதிகரமான தும்பைப்பூ ஏராளமாய் இருந்ததை அவர் பார்த்தார். அந்த இடம் அசுசியாய் இருந்ததையும் கவனியாது தும்பை மலரை எடுத்துத் தம்மீது சாத்திக்கொண்டு அங்கேயே சிவத் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். ரயில் வண்டி வந்ததையும் கவனியாது நிஷ்டையிற் கிடந்த பரமஹம்ஸரை ஹிருதயர் தம் தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு போய் வண்டியில் வைக்கவேண்டியதாயிற்று.

தக்ஷிணேசுவரத்தில் வந்திருந்தபோது, ஒரு நாள் கல்கத்தா ஆதி பிரம்ம சமாஜத் தலைவர் தேவேந்திர நாத தாகூரைப்* பார்க்க ஸ்ரீ ராமகிருஷ்ணர் சென்றார். அப்போது அவர் மதுரா நாதரையும் தம்மோடு அழைத்துக் கொண்டு போயிருந்தார். தேவேந்திர நாத தாகூர் பிரசித்தி பெற்ற ஒரு பெரியவர். அவரை மஹரிஷி என்று அழைத்தார்கள். ஆகையினால்தான் அவரைப் பார்க்க ஸ்ரீ ராமகிருஷ்ணர் சென்றிருந்தார். ஒருவரைப் பார்த்த மாத்திரத்தில் அவர் உள்ளக் கிடக்கையைக் கண்ணாடிப் பெட்டிக்குள் இருக்கும் வஸ்துவைப் போலப் பரம ஹம்ஸர் உடனே தெரிந்துகொள்வார். தேவேந்திர நாதரது நெஞ்சம் இரத்தம் சுரந்து சற்றே இளகி யிருந்ததைப் பார்த்து அவரிடம் சிறிது அருள் தாகம் உண்டென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் மகிழ்வடைந்தார். ஆனால் கல்வி, பொருள், புகழ் முதலியன படைத்திருந்ததைப் பற்றிய ஆணவம் அவர்பால் இருந்ததாகவும் அவர் உணர்ந்தார். மதுராநாதரிடம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லியதாவது:— "அகங்காரம் எதினின்றும் உதிக்கின்றது? ஞானத்தினின்றா, அல்லது அஞ்ஞானத்தினின்றா? பிரம்ம ஞானிக்குப் பொருளைப் பற்றியும் படிப்பைப் பற்றியும் கர்வம் எப்படி வரமுடியும்? விவேகமும் வைராக்கியமும் இல்லாவிட்டால் பண்டிதனுங்கூட ஒரு புல்லுக்குச் சமானம் என்று எனக்குத் தோன்றுகிறது. தேவேந்திரநாதருக்குச் சிறு வயதுள்ள பிள்ளைகள் ஏராளமாய் இருக்கின்றார்கள். அவர் போகத்தில் இருந்துகொண்டே யோகத்திலும் முயலுகிறார். அதுதான் எனக்கு விளங்கவில்லை."

## பத்தாம் அத்தியாயம்
## க்ஷேத்திர யாத்திரை

மதுராநாதர் 1868-வது ஆண்டில் தமது உறவினர் அடங்கிய பெரிய கூட்டமொன்றை அழைத்துக் கொண்டு காசிக்கும் பிருந்தாவனத்துக்கும் யாத்திரை

*இப்போது உலகெங்கும் பெயர் பெற்றிருக்கும் கவிச் சக்கரவர்த்தியாகிய ரவீந்திரநாத் தாகூரின் தந்தை.

போனார். அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரை யும் தம்மோடு வரவேண்டுமென்று வேண்டி அழைத்துச் சென்றார். வழியில் அவர்கள் வைத்திய நாதம் என்னும் ஸ்தலத்தில் தங்கி யிருந்தபோது ஆங்கு ஏழை ஜனங்கள் பசிநோய் வாய்ப்பட்டிருந்ததையும், உடுக்கத் துணி யில்லா திருந்ததையும் பார்த்த பரமஹம்ஸர் பரிதாபப் பட்டார். அவர் மதுராநாதரிடம் "ஜகன்மாதா உம் மிடம் நிரம்பப் பணம் கொடுத்து வைத்திருக்கிறாளே, ஆதலால் இந்த ஏழை மக்களுக்குத் திருப்தியாக ஒரு விருந்து படைத்துத் தலைக்கு ஒரு துணியும் தாரும்" என்றார். "அவ்வளவு பணம் கொண்டுவரவில்லை; என் செய்வது!" என்று மதுராநாதர் தயங்கினார். "போம்! எனக்குக் காசி யாத்திரையும் வேண்டாம். மற்றொரு யாத்திரையும் வேண்டாம். இந்த ஏழை மக்களோடு இருந்தாற்போதும்" என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீ ராம கிருஷ்ணர் அவர்களுடன் போய் அமர்ந்துகொண்டார். இவரது ஜீவகாருண்யத்தைப் பார்த்த மதுராநாதர் வேண்டிய பணமும், மூட்டை மூட்டையாகத் துணியும் கல்கத்தாவுக்குத் தந்தியடித்து வரவழைத்து இவரது விருப்பத்தை நிறைவேற்றினார். பிறகு அவர்கள் புறப் பட்டுக் காசி போய்ச் சேர்ந்தார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்ட காசி நகரின் திருக்காட்சி மிகவும் அற்புதமானது. எண்ணிறந்த மகான்கள் எண்ணிய சீரிய எண்ணங்கள் யாவும் உறைந்து சின்மய மாயும் பொன்போல மிளிர்ந்தும் ஆங்கு இருந்ததை இவர் பரவச நிலையிலிருந்துகொண்டு பார்த்தார். அந்த மஹா க்ஷேத்திரத்தைத் தான் பொன்னம்பலம் என்று சொல்லத்தகும். காசி விஸ்வநாதர் கோயிலுக்கும் கேதாரநாதர் கோயிலுக்கும் நாள்தோறும் தரிசனத்துக் குப் போகும்போதே பரமஹம்ஸர் சமாதி நிலை அடைந்து விடுவார். ஹிருதயர் இவரைத் தாங்கி யழைத்துச் செல்லுவார். ஒவ்வொரு கோயிலின் மகிமைக்கு ஏற்ற வாறு இவரது பரவச நிலையும் அதனுள் புகும்போது

அதிகரிக்கும். விஸ்வநாதர் கோயிலைவிடக் கேதாரநாதர் கோயிலில் இவரது சமாதி ஆழ்ந்ததாயிற்று. காசியில் அப்போதிருந்த பெரிய சாதுக்களை யெல்லாம் பரமஹம்ஸர் போய்ப் பார்த்து வந்தார். அவர்களில் திரைலிங்க சுவாமிகள் மீது இவருக்குப் பேரன்பு உண்டாயிற்று. அடிக்கடி இவர் அப்பெரியாரைப் போய் தரிசித்து வருவார். அவராலேதான் காசி க்ஷேத்திரத்துக்கு ஒரு புதிய மகிமை வந்திருந்த தெனவும் இவர் தெரிவித்தார். திரைலிங்க சுவாமிகள் அப்போது மௌனவிரதம் சாதித்து வந்தார். கடவுள் ஏக வஸ்துவாயிருக்கையில் மதவாதிகள் பல தேவதைகள் இருப்பதாக ஏன் அரற்றுகின்றனர் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேட்டதற்கு, அந்த மௌனி ஒரு கையைத்தூக்கி ஒரு விரலையும் மற்றொரு கையைத் தாழ்த்தி ஐந்து விரலையும் விரித்துக் காட்டினார். அதாவது சமாதியவஸ்தை அடைந்தவர்கள் ஏக வஸ்துவையும் விவகாரத்தில் இருப்பவர்கள் பல வஸ்துக்களையும் காண்கிறார்கள் என்பது அவர் காட்டிய ஜாடையின் பொருள். காசியில் இறந்தவர்களைத் தகனம் செய்யும் இடமாகிய மணிகர்ணிகைத் துறையைக் கண்டதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதியில் ஆழ்ந்தார். அப்போது அவர் கண்ட காட்சியைச் சொல்லக் கேட்டவர்கள் பெருவியப் பெய்தினர். காசியில் இறந்த ஒவ்வொரு ஜீவனது காதிலும் பரமேசுவரன் தாரகமந்திரத்தை உச்சரித்து மோக்ஷத்துக்கு வழிகாட்டுவதையும், அந்த ஜீவர்களது பந்தங்களை யெல்லாம் பரமேசுவரி போக்குவதையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதி நிலையிலிருந்து பார்த்தார்.

காசியில் கொஞ்சகாலம் இருந்துவிட்டு மதுராநாதர் முதலியோரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரும் பிருந்தாவனம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே பரமஹம்ஸர் பார்த்த ஒவ்வோர் இடமும் அவருக்குக் கண்ணனின் ஞாபகத்தை ஊட்டிற்று. யமுனை நதியில் நீராடப்போன போதெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதி அடைந்து

விடுவார். ஹிருதயர் அவரை ஒரு பாலகனைப் போலக் குளிப்பாட்டி அழைத்து வருவார். ஒருநாள் அஸ்தமன வேளையில் ஒரு மந்தை மாடுகள் கழனியிலிருந்து திரும்பி வந்ததைப் பார்த்ததும் "கிருஷ்ணன் எங்கே? கிருஷ்ணன் எங்கே?" என்று அலறிக்கொண்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஓடினார். கோவர்த்தன மலையையும் இராதா குண்டம் சியாமகுண்டம் முதலிய தடாகங்களையும் பெரிய மரங்களையும், மான் மயில் முதலியவைகளையும் பார்த்தபோதெல்லாம் கிருஷ்ணனது ஞாபகம் அவருக்கு வந்தது. இவையெல்லாம் இருந்தும் கிருஷ்ணனைக் காணோமே யென்று அவர் தேடி யலைவார்; அடிக்கடி சமாதியிலும் ஆழ்ந்து விடுவார்.

கங்காமாதா வென்று அழைக்கப்பட்ட விருத்தாப்பிய அம்மை ஒருவர் பிருந்தாவனத்தில் இருந்தார். அவர் பத்தியிலும் பாரமார்த்திகத்திலும் முதிர்ந்த ஒரு பெரியார். அவரது மகிமை எல்லோருக்கும் நன்கு தெரிந்திருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரைப்பார்க்க அடிக்கடி போய் வருவார். சொற்ப நாளைக்குள் ஒருவர் பால் ஒருவருக்குப் பேரபிமானம் ஏற்பட்டுவிட்டது. பிருந்தாவனத்திலேயே அந்த அம்மையாருடன் அமர்ந்து விடலாமாவென்ற எண்ணம் பரமஹம்சருக்கு உண்டாயிற்று. ஆனால் ஈசுவர சங்கற்பம் அவ்வாறில்லை. மதுராநாதருடன் இவர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பிவர நேரிட்டது. வரும் வழியில் விஷ்ணு கயாவில் சொற்ப நாள் தங்கியிருந்து தரிசனம் செய்ய மதுராநாதர் விரும்பினார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அதற்கு இணங்கவில்லை. கயாவுக்குப் போனால் தம்மால் திரும்பிவர இயலாதென்று அவர் கூறினார். ஆகவே எல்லோருமாக நேரே கல்கத்தா வந்து சேர்ந்தார்கள்.

கல்கத்தாவில் கொலுட்டோலா என்னுமிடத்தில் சில வைஷ்ணவ பக்தர்கள் ஆண்டுதோறும் ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் பெயரால் ஓர் உற்சவம் நடத்துவதுண்டு. அப்போது பஜனை, பாராயணம், சங்கீர்த்தனம் முதலி

யன விமரிசையாக நடைபெறும். ஸ்ரீ சைதன்ய தேவருக்கென்று ஓர் ஆசனம் அமைத்து அதன்மீது புஷ்பம் முதலியன சாத்துவார்கள். ஸ்ரீ கௌரங்கர் சூக்ஷ்ம சரீரத்தில் அங்கு எழுந்தருளுகிறார் என்பது அந்த பக்தர்களின் கருத்து. ஆதலால் எல்லோரும் பக்தியுடன் அந்த ஆசனத்தின் முன் நின்று வணங்குவார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அந்த வைபவத்துக்கு ஒரு முறை அழைக்கப்பட்டிருந்தார். அங்கு உருக்கத்துடன் பாடப்பெற்ற பாடல்களையும் கீர்த்தனங்களையும் கேட்டதும் அவர் ஆனந்த பரவசமடைந்தார். ஸ்ரீ கௌரங்க தேவருக்கென நியமிக்கப்பட்டிருந்த ஆசனத்தின்மீது மெய்மறந்த நிலையினராய் அவர் ஏறி நின்றதும் சமாதியில் ஆழ்ந்தார். அப்போது அவரது முகத்தில் தெய்வீகப் புன்னகை ததும்பியது. பரமஹம்சர் சைதன்ய தேவர் மயமாய் மாறிவிட்டதை எல்லோரும் உணர்ந்தார்கள். அத் திருக்காட்சியைப் பார்த்தவர்களுக்குப் பயபக்தி உண்டாயிற்று. அந்தக் கூட்டத்திலுள் இருந்த மத வெறிகொண்ட வைஷ்ணவனுங்கூட இவர் கௌரங்கர் ஆசனத்தின்மீது நின்றது செய்யத்தகாத காரியமென்று மறுக்கத் துணிந்தானில்லை. எல்லோரும் பேரானந்தத்தில் மூழ்கி, "ஹரி, ஹரி" என்று கோஷித்தார்கள். இந்தத் திருநாமத்தைக் கேட்டதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதி கலைந்து சங்கீர்த்தனத்தில் சேர்ந்து கொண்டார் அவர் பகவந் நாமத்தைப் பாடிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடியதைப் பார்த்தவர்கள் பரவசமடைந்தார்கள். கௌரங்க தேவரது திருவிளையாடல்களைப் பற்றிய ஞாபகம் எல்லோருக்கும் வந்தது. இவ்வாறு நெடு நேரம் கழிந்தபின் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவ்வருளானந்த நிலையினின்றும் நீங்கி உலகப் பிரக்ஞை பெற்றுத் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பினார்.

பரமஹம்ஸர் போனபின்பு பக்தர்களுக்குள் அவரது நடத்தையைப்பற்றி அபிப்பிராயபேதம் ஏற்பட்டது. சிலர் அவர் செய்த காரியத்தைப் போற்றினர்; மற்றுஞ்

சிலர் தூற்றினர். கடைசியாக இந்தச் செய்தி பர்துவான் ஜில்லாவிலே கால்ஞு என்ற இடத்திலிருந்த பகவான் தாஸ் பாபாஜி என்ற ஒரு வைஷ்ணவப் பெரியார் காதுக்கு எட்டியது. அவ்வயோதிகரின் மகிமை வங்காளமெங்கும் தெரிந்திருந்தது. பாரமார்த்திக விஷயத்தில் சந்தேக நிவர்த்தியின்பொருட்டு ஜனங்கள் பல விடங்களிலிருந்து அவரைத் தேடிவருவார்கள். கௌரங்க தேவருக்காக வைத்திருந்த திருப்பீடத்தின்மேல் ஸ்ரீ ராமகிருஷ்ணர் போய் நின்றது அடாத செய்கையென்று பாபாஜி மிகக் கண்டித்தார். ஆனால் இந்த விவரங்களைப் பற்றிப் பரமஹம்ஸ தேவருக்கு ஒன்றுமே தெரியாது.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு 1870-வது ஆண்டிலே ஸ்ரீ ராமகிருஷ்ணரும், மதுராநாதரும், ஹிருதயரும் ஸ்ரீ சைதன்யர் பிறந்த விடமாகிய நவத்வீபம் அல்லது நதியா என்னும் க்ஷேத்திரத்தைப் பார்க்கப் புறப்பட்டார்கள். அவர்கள் போகும் வழியில் பகவான் தாஸ் பாபாஜியைப் பார்க்கக் கால்ஞுவில் இறங்கினார்கள். பரமஹம்ஸர் அந்த வைஷ்ணவர் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கும்போதே அவர், "யாரோ பெரியார் வருகிற மணம் வீசுகிறது" என்றாராம். பகவான் தாஸ் ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் பேசிக்கொண்டிருக்கும்போது கூட அவர் ஜப மாலையை உருட்டிக் கொண்டிருப்பதற்குக் காரணம் யாதோ வென்று ஹிருதயர் வினவினார். அதற்கு அந்த வைஷ்ணவப் பெரியார், சதா மந்திர ஜபம் செய்துகொண்டிருக்க வேண்டுமென்று பிறருக்கு வழிகாட்டுவதற்காகத் தாம் அவ்வாறு செய்வதாய் விடைபகர்ந்தார். அவர் இவ்வித எண்ணங் கொண்டிருந்தது ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பிடிக்கவில்லை. உண்மையில் கடவுள் ஒருவரே எல்லாருக்கும் அருள் புரிந்தும் வழி காட்டியும் வருகிறார். பக்தன் ஒருவன் இதை உணராது தான் மக்களுக்குப் புகட்டுவதாகவும் நல்வழி காட்டுவதாகவும் எண்ணுவதெல்லாம் அஞ்ஞானத்தினின்று உதிப்பது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்தார்.

பகவான் தாஸ் பாபாஜியும் தமது குற்றத்தை ஏற்றுக் கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடிக்கடி பரவச நிலையடைந்ததையும், அவர் மாட்டு மிளிர்ந்த அருள் இலட்சணங்களையும் பாபாஜி பார்த்து வியந்தார். இவர்தான் ஸ்ரீ சைதன்ய தேவருக்காக அமைத்திருந்த ஆசனத்தில் நின்றவர் என்று அவர் அறிந்தபோது, தாம் தெரியாது இந்த மகா புருஷர் மீது பழி சுமத்தியதற்கு அவர் மன்னிப்பும் கேட்டுக் கொண்டார்.

பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணரும் ஏனையவர்களும் நவத்வீபம் போய்ச் சேர்ந்து அங்கிருந்த பல கோயில்களையும் தரிசித்தார்கள். ஆனால் இந்நாட்களில் பரமஹம்ஸர் தாம் வழக்கமாக அடையும் ஆனந்த பரவச நிலையை இவ்விடங்களில் எய்தவில்லை. இதற்குக் காரணம் யாதென்று அவருக்கே விளங்கவில்லை. ஆனால் படகு ஏறி நதிக்குள் வந்ததும் அவர் சமாதியில் ஆழ்ந்தார். அவர் படகினின்று கங்கையினுள் விழாதிருக்கும்படி ஹிருதயர் அவரைப் பிடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அந்தப் பரவச நிலையில் இருந்தபோது, கௌரங்கரும் நித்தியானந்தரும் பொன்னை யொத்த திருமேனியுடன் ஓடிவந்து தம்முள் ஐக்கியமாவதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்டார். புராதன நவத்வீபம் தாம் பரவசமடைந்த இடத்தில் இருந்து நதியினுள் மூழ்கிப்போய் விட்டதென்றும் இப்போது இருக்கும் நவத்வீபம் அதன் பின் உண்டானதென்றும் பரமஹம்ஸர் தெரிவித்தார். கொஞ்ச நாளைக்குமுன் நடந்த சரித்திர ஆராய்ச்சியும் அவரது கூற்றை நிரூபித்திருக்கிறது.

மதுராநாத விஸ்வாஸருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும் இடையே இருந்த இணக்கம் பெறுதற்கு அரியதாகும். மதுராநாதர் உலக இன்பங்களில் கொஞ்சம் வாஞ்சை யுடையவராயிருந்தும், ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் திருத்தொண்டு ஆற்றுவதில் சிறிதும் பின் வாங்கினரில்லை. தமது உடல், பொருள், ஆவியெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருப்பணிக்கென்றே அவர் ஒப்

படைத்து வைத்திருந்தார். பரமஹம்ஸர் மதுராநாதர் மீது பேரன்பு பாராட்டி வந்தார். சிறுகச் சிறுக அவரைப் பாரமார்த்திகத்திலும் பயிலுவித்து வந்தார். இவரது திருவருளால் மதுராநாதருக்குத் தெய்வீகத் திருக்காட்சிகளும் பேரின்ப நுகர்ச்சியும் பன்முறை கிடைத்தன. சுமார் பதினாறு ஆண்டுகளாக அவர் பரமஹம்ஸ தேவருக்கு இடையறாத் திருத்தொண்டு ஆற்றியபின் 1871-வது வருஷத்திலே பரகதி யடைந்தார்.

## பதினோராம் அத்தியாயம்

## பெண்ணெலாம் அன்னை வடிவம்

காமார்ப்புகூரிலே தம் கணவரது பேரருள் பெற்ற பின் சாரதா தேவியார் திரும்பவும் ஜயராம்பாடி ஏகிப் பிதாவுடன் வாழ்ந்திருந்தார். "அவர் என்மீது கருணை வைத்தது முதல் பேரின்பம் இடையறாது என் உள்ளத்தில் குடிகொண்டிருப்பதை நான் உணர்கிறேன்" என்று அந்த அம்மையார் சொல்லியதுண்டு. இந்த அருட்பேறு பெற்றதன் பயனாக அவரது சுபாவமும் அறவே மாறி வந்தது. அடக்கம், அமைதி, அன்பு, சுயநலங் கருதாமை முதலிய உயர்குணங்கள் தேவியார் மாட்டு மிகுதியும் மிளிரலாயின. தாமும் தக்ஷிணேசுவரம் சென்று தமது நாதருடன் பரவச முற்றிருக்கும் நாள் எந்நாளோ வென்று இவர் ஆவலுடன் எதிர் பார்த்திருந்தார். ஆனால் தம்மை அன்புடன் உவந்து ஆட்கொண்ட பிரபு ஒரு நாளும் தம்மைக் கைவிடமாட்டாராதலால், சரியான காலம் வரும் வரையில் காத்திருப்பதே கடன் என்றெண்ணி அவர் ஜயராம்பாடியிலேயே அமர்ந்திருந்தார். இவ்வாறு நான்கு ஆண்டுகள் கழிந்த பின் தேவியார் கங்கா ஸ்னானத்தின் நிமித்தம் கல்கத்தா செல்லும் விருப்பம் தெரிவித்தார். அவருடைய உள்ளக் கிடக்கை இன்னதென்று அறிந்த பிதா இராமச்சந்திர முகர்ஜி அவரைத் தக்ஷிணேசுவரம் அழைத்துச் சென்று கணவருடன் மகிழ்வுற்று வாழ்ந்திருக்கச் செய்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் எக்கருமத்திலாவது சுயேச்சை யாகத் தாமே நுழையமாட்டார். 'எல்லாம் ஜகன்மாதா வின் திருவுளப்படி ஆகுக' என்பது அவரது மனோ நிலை. கமார்ப்புகூரிலிருந்து தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பி வந்தபின் அவர் சாரதா தேவியைப்பற்றிச் சிறிதும் சிந்திக்கவேயில்லை. ஆனால் இப்போது அந்தப் பெண்மணி தானாகவே இவரை வந்தடைந்ததும், அன்னையின் திருவருட் செயலே என்றெண்ணி ஸ்ரீ ராம கிருஷ்ணர் தமது கடனாற்ற முற்பட்டார். இது காலை பரமஹம்ஸரைப் பெற்றெடுத்த தாயாகிய சந்திரமணி தேவி தமது அந்திய காலத்தைக் கங்கா தீரத்தில் கழித் தற்பொருட்டு தக்ஷிணேசுவரத்தில் வசித்து வந்தார். சாரதா தேவியையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அன்புடன் வரவேற்று, மாமியாரும் மருமகளும் ஒருங்கு வாழ்ந் திருக்கச் செய்தார். நான்கு வருஷங்களுக்குமுன் கமார்ப்பு கூரில் தமது வாழ்க்கைத் துணைவிக்கு வாழ்வு முறை புகட்டத் துவக்கியதை இங்கு இப்போது அவர் பூர்த்தி பண்ணி வைத்தார். அவர் சாரதாதேவிக்குக் கற்பித்த தலை சிறந்த கல்வி, "சந்திரன் எல்லாக் குழந்தைகளுக்கும் மாமா ஆவதுபோல் கடவுள் எல் லாருக்கும் உரியவர். அவரை வழிபட எல்லாருக்கும் சம உரிமை யுண்டு. அவரை வேண்டி நாடுபவர்கள் முன்பு அவர் கருணையுடன் எழுந்தருளுகிறார். நீயும் அவரை நாடினால் அவரைக் காண்பாய்" என்பதேயாம். சம்சார நிர்வாகம் முதல் பிரம்ம வித்தை ஈறாக எல்லா வித்தைகளையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவருக்குப் புகட்டி வந்தார்.

சாரதா தேவியின் மீது ஸ்ரீ ராமகிருஷ்ணர் வைத் திருந்த அன்பு அளவுகடந்தது. கணவனுக்குத் தொண்டு புரிவது ஒன்றே கற்புடைய மனையாள் ஒருத்தி விரும்புவ தாகும். அந்த உரிமையனைத்தும் பரஹம்ஸர் அவருக்கு அளித்தார். மணம் புரியு முன்பே தமது வாழ்க்கைத் துணைவியின் உள்ளத்தினின்று சிற்றின்ப அவா ஏதா வது இருந்தால், அதைத் துடைத்துவிடும்படி பரமஹம்

ஸர் ஜகன்மாதாவிடம் வரம் வேண்டியிருந்தார். சாரதா தேவி அநேக நாள் அல்லும் பகலும் இவரோடு கூடவே வாழ்ந்திருந்தும் உடல் சம்பந்தமான இச்சை எதுவும் அவர் உள்ளத்தில் உதித்தது கிடையாது. ஸ்ரீ ராமகிருஷ்ணரது தூய்மையைப்பற்றிக் கூறவேண்டியதில்லை. இருவரும் ஒரே படுக்கையிற் படுத்த நாட்களும் உண்டு; எனினும் அவர் இரவு முழுதும் சமாதி அவஸ்தையிலேயே தோய்ந்து கிடப்பார். ஒருநாள் நள்ளிரவில் அவர் விழித்தெழுந்தபோது சாரதாதேவியார் அண்டையில் அயர்ந்து நித்திரை செய்வதைப் பார்த்தார். அப்போது அவர் தம்மைச் சோதிக்க எண்ணித் தமது மனத்தை நோக்கி, "மனமே, உலகம் பேராசைப் பட்டுச் சிற்றின்பம் நுகர விரும்பும் பெண் இதோ உன் முன் இருக்கிறாள். இவ்வின்பத்தில் இச்சை வைப்பவர்கள் உடற்கூற்றில் கட்டுண்டு போய்விடுகின்றனர்; கடவுளைக் காண அவர்களால் இயலாது. உனக்கு வேண்டியது இந்தச் சிற்றின்பமா அல்லது கடவுளின் பேரின்பமா? உள்ளதைச் சொல்லிவிடு" என்றார். இந்தச் சோதனைக்கு மறுமொழியாக அவரது மாசில்லாமனம் அன்றிரவெல்லாம் சமாதி நிலை பெற்றிருந்தது.

ஒருநாள் சாரதா தேவியார் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தபோது அவரை நோக்கி "நாதா, தாங்கள் என்னை எவ்வாறு பாவிக்கிறீர்கள்?" என்று வினவினார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்மைச் சுட்டிக்காட்டி, "ஆலயத்தில் நான் வழிபடும் ஜகன்மாதா ஓர் உருவெடுத்து இந்த தேகத்தை ஈன்றாள்; அவளே மற்றோர் உருவெடுத்து இப்போது இங்கு நின்றுகொண்டு இந்த தேகத்துக்குப் பணிவிடை செய்கிறாள்" என்று உடனே விடையிறுத்தார். ஒரு திருநாளன்று இரவில் காளிபூஜை செய்ய விரும்பிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் அதற்கு வேண்டிய சாமக்கிரியைகளையெல்லாம் தாம் வசித்திருந்த அறையில் சேகரித்து வைத்தார். வழக்கம் போல் ஜகன்மாதாவின் கோயிலில் பூஜை செய்வதற்குப் பதிலாகத் தமது அறையிலேயே ஆராதனை செய்ய எண்

ணிச் சாரதா தேவியும் தம்மோடு இருக்கவேண்டு மென்று அவர் விரும்பினார். பூஜை செய்யத் தம்மை ஆயத்தப்படுத்திக்கொண்டு தம்மெதிரே அமைத்திருந்த ஓர் ஆசனத்தில் அமரும்படி சாரதா தேவிக்கு அவர் கை காட்டினார். தேவியாரும் அவ்விதமே வந்தமர்ந்து பரவச மடைந்துவிட்டார். விக்கிரகத்தின் மூலமாகப் பரா சக்திக்குச் செய்யவேண்டிய வந்தனை வழிபாடுகள் அனைத் தும் இந்தக் கோதில்லாக் குலமகள் மூலம் பரமஹம்ஸர் செய்து முடித்தார். பிறகு சமாதியிற்றோய்ந்திருந்த அம்மையின் திருவடிகளில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சாதன பலன்கள் யாவையும் சமர்ப்பித்துப் பூஜையை முடித்தார்.

இம் மேன்மக்கள் இருவரும் பல ஆண்டுகளாக இயைந்து வாழ்ந்திருந்தனர். ஆனால் அவர்கள் இருவரும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டையன்றி வேறு எவ்வித உடல் சம்பந்தத்தையும் ஒரு கணப்பொழுதாவது அறிந்தார்களில்லை. பிரம்மானந்தத்தின் சுவையறிந்து பரவச மடைந் திருந்தவர்களுக்குக் கேவலம் உடல் இன்பத்தில் மனம் செல்லுமோ? ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதா தேவியை ஜகன்மாதாவின் வடிவெனவும், பர மாத்மாவெனவும், பிரம்ம சொரூபம் எனவும் பாராட்டி வந்தார். ஆணின் பெருமைக்கும் பெண்ணின் பெரு மைக்கும் இவ்விருவரும் தக்க சான்றாக விளங்கினர். பாரமார்த்திக வாழ்வுக்குத் துணைபுரிதலே நாயகனும் நாயகியும் ஒருவருக்கு ஒருவர் செய்தற்குரிய உதவியாம். இத்தகைய இல்லறமே உண்மை இல்லறம். இதைத் தான் நல்லறமென்று போற்றத்தகும். இவர்களைப் போன்ற தூய தம்பதிகளை இம்மண்ணுலகிற் காண்பது அரிதினும் அரிதே. எனினும் இத்தகைய பெரியோர் உலகிற்றோன்றுவது மக்களுக்கு வழிகாட்டவும், நம் பிக்கையும் ஊக்கமும் ஊட்டுவதற்குமே யன்றோ? இவர்கள் காட்டிய வழிசென்று உய்ய அறிஞர் அனை வரும் முயல்வார்களாக.

கல்கத்தாவிலே சம்புசரண மல்லிகர் என்ற அறிஞர் ஒருவர் இருந்தார். அவர் பிரம்ம சமாஜத்தின் கொள்கையில் நம்பிக்கை உடையவர். பொது நன்மைக்காகத் தாராளமாய்ப் பொருள் உதவி செய்யும் பரோபகார சிந்தனை அவரிடத்து மிகுந்திருந்தது. பழகப் பழக ஸ்ரீ ராமகிருஷ்ணர்மீது பேரபிமானமும் பற்றுதலும் அவருக்குண்டாயின. இவரை "குருநாதர்" என்று அழைப்பது மல்லிகரது வழக்கம். ஆனால் தம்மைக் "குருநாதர்" என்று அழைத்தது ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. "யார் யாருக்குக் குரு? கடவுள் ஒருவரைத் தவிர வேறு குரு இல்லை" என்றார் பரமஹம்ஸர். கிறிஸ்து நாதரது ஜீவிய சரித்திரத்தைச் சம்புசரண மல்லிகர் படித்து விளக்கினதைப் பரமஹம்ஸர் பன்முறை கேட்டு அதிசயித்தார். அதன் பயனாகக் கிறிஸ்துமத வழிபாட்டில் அவர் மனம் சென்றது. அப்பொழுது கிறிஸ்துவ ஆலயத்தில் அப்பெரியாரது அடியார்கள் வழிபடுகிறதைப் பற்றிய ஞாபகமே அவரது மனதில் இடையறாது உறைந்து கிடந்தது. பரமஹம்ஸர் சில நாளாகப் பஞ்சவடியில் அமர்ந்து ஏசுநாதரைப் பற்றியே தைலதாரைபோல இடையறாது சிந்தித்து வந்தார். இதே தியானமாக அவர் அங்கிருந்தபோது அளவிலா அமைதியும் தெய்வீக சௌந்தரியமும் பொருந்திய மானிட வடிவம் ஒன்று தம்மெதிரே வந்ததை இவர் கண்டார். அம் மனிதரைப் பார்த்தால் அயல் நாட்டவர் போல் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் தோன்றியது. அழகிய பெரிய கண்களையுடைய அவரது திருமுகத்தில் மூக்கு சிறிது தட்டையாயிருந்தும் அவரது திவ்விய சௌந்தரியம் அதனால் குறைவு படவில்லை. அம்மகா புருஷர் யாராயிருக்கக் கூடுமோ வென்று பரமஹம்ஸர் ஐயமுற்றிருந்தபோது, அவர்தான் உலக நன்மைக்காகத் தம் உடலைப் பலி கொடுத்த கிருஸ்துநாதர் என்ற எண்ணம் இவரது உள்ளத்தில் பாய்ந்தது. அன்பே வடிவெடுத்து வந்த அந்த உலக ரக்ஷகர் பரமஹம்ஸரைக் கட்டியணைத்து அவரது உடலில் ஐக்கியமானார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்மை

மறந்து, சமாதி நிலையெய்தி, சகுணப் பிரம்மத்தில் ஒடுங்கினர். மீண்டும் அவருக்குப் புறவுணர்ச்சி வந்தபோது ஏசுகிறிஸ்துவும் அவதார புருஷரே என்று அவர் முடிவு கட்டினர்.

கௌதம புத்தரும் கடவுளின் அவதாரம் என்றே பரமஹம்ஸர் போற்றி வந்தார். பூரியிலிருக்கும் ஜகந்நாதர், சுபத்திரை, பலராம் ஆகிய மூன்று மூர்த்திகளும் புத்தர், தர்மம், சங்கம் ஆகிய புத்த மதத்தின் மூன்று அம்சங்கள் என்பதை இவர் நன்கு அறிந்திருந்தார். பூரி ஜகந்நாதரிடமும், பூரி கோயில் பிரசாதத்திலும் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு இருந்த பக்தி அளவிட வொண்ணாதது. கங்கா தீர்த்தமும், பிருந்தா வனத்தின் மண்ணும் பூரி ஜகந்நாதத்தின் பிரசாதமும் பிரம்ம சொரூபம் என்றே அவர் பாராட்டுவதுண்டு. பூரியில் ஜாதி வேற்றுமை பாராட்டாதிருப்பதற்குக் காரணம் அங்குப் பிரபலப் பட்டிருந்த புத்தரின் போதனையே என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருதி வந்தார். புத்தரது போதனைக்கும் வைதிக ஞான காண்டத்துக்கும் எவ்வித முரண்பாடும் இல்லை என்பதே இவரது கருத்து. ஜைனமத ஸ்தாபகர்களாகிய தீர்த்தங்கர்கள் மீதும், சீக்கிய மதத்தைஸ்தாபித்த பத்து குருக்கள் மீதும் பரமஹம்ஸருக்குப் பேரபிமானம் இருந்தது. ஆனால் அவர்களை இவர் அவதார புருஷர்களாகக் கருதவில்லை.

சர்வ மதங்களையும் சார்ந்த சாதனங்களைக் கையாண்டபோது பரமஹம்ஸர் அநேக அனுபவங்களைப் பெற்றார். அந்த அனுபவங்களிற் சில சிறப்பாகத் தம்மையும், ஏனையவை பொதுவாகப் பாரமார்த்திக வாழ்வையும் குறித்தவைகள் என்பதை அவர் தெள்ளிதின் உணர்ந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரது தபோபலன்களும் ஆத்மானுபவங்களும் பிறரது நன்மையின் பொருட்டே விளைந்தனவாம். சாமானிய சாதகன் ஒருவன் ஏதோ ஒரு மார்க்கத்தில் ஆயுள் முழுதும் பயின்றாலும் பூர்த்தி பெறுவது அரிதாயிருக்கையில் பரமஹம்ஸர் நானாவித

சாதனங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கையாண்டு அதி விரைவில் பலன் பெற்றதற்குக் காரணம் அவர் ஓர் அவதார புருஷரென்பதே யாகும். ஏனைய ஜீவன்களைப் போல முக்தியை நாடி இவர் உலகிற் பிறக்கவில்லை. ஏனெனில் தமது உண்மை சொரூபம் இவருக்கு எப்போதும் தெரிந்திருந்தது. ஆதலால் இவர் செய்த சாதனங்களெல்லாம் உலகை உய்விக்கும் பொருட்டேயாம். அரசாங்க உத்தியோகஸ்தன் ஒருவன் கஷ்டம் விளையும் இடங்களுக்கெல்லாம் செல்லவேண்டி வரும். அது போன்றதே இவரது நிலைமை.

பாரமார்த்திக விஷயங்களைப்பற்றிப் பரமஹம்ஸர் அனுபவத்தில் கண்டு வெளியிட்ட உண்மைகள் வருமாறு :— பெரியோர்களால் காணப்பட்ட ஒவ்வொரு மதமும் கடவுளை அடைவதற்கான ஒவ்வொரு வழியேயாம் அடிப்படையான தத்துவங்களைப்பற்றி மதங்களுள் வேற்றுமையில்லை. வெளிச் சடங்குகளிலும், பழக்க வழக்கங்களிலும் காலதேச வர்த்தமானத்துக்குத் தக்கபடி மதங்களினுள் வேற்றுமைகளிருக்கின்றன. அறியாமையால் மனிதன் தன் மதத்தையே முக்கியமெனப் பாராட்டி வழக்கிடுகிறான். தன் மதத்தில் பற்று வைப்பதுபோலப் புற மதத்தில் சகிப்புக்கொள்ள வேண்டும். சமரசம் என்பது இதுவேயாகும். அத்வைதம், விசிஷ்டாத்வைதம் துவைதம் இம் மூன்றைப்பற்றி ஆசாரியர்களுள் அபிப்பிராய பேதம் இருந்தது விசனிக்கத்தக்கது. இந்த மூன்று கொள்கைகளும் ஒன்றை ஒன்று அனுசரித்து இருக்கின்றனவே யொழிய அநேகர் கருதுகிறபடி ஒன்றோடு ஒன்று முரண்படுகிறதில்லை. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் இம் மூன்றுக்கும் உபநிடதத்தில் பிரமாணம் இருக்கின்றது. சாதகன் துவைதத்தில் துவங்கி விசிஷ்டாத்வைதத்தைக் கடந்து அத்வைதத்தில் முடிவு பெறுகிறான். ஆதலால் இந்த மூன்று அவஸ்தைகளும் இன்றியமையாதவைகளே. ஆத்மானுபவத்தில் அத்வைதம் முடிவான நிலை. அது மனமொழிகளுக்கு

எட்டாதது. நிர்விகற்ப சமாதியில் அபரோக்ஷ அநுபூதி வாயிலாக எய்தும் நிலை இதுவாம். விசிஷ்டாத்வைத அனுபவம் வரையுமே புத்திக்கு எட்டும். அந்த அனுபவங்களை இன்னவென்று நவிலவும் இயலும். விசிஷ்டாத்வைத அனுபவம் பூர்த்தியாகும்போது அகண்டாகார நிர்க்குணப் பிரம்மமும், சகல கல்யாண குணங்களையுடைய சகுணப் பிரம்மமும், உண்மையில் ஒன்றே என்பது தெரியவரும். பகவானும், பகவானுடைய திருநாமமும் பகவானுடைய உறைவிடமும் எல்லாம் சின்மயமேயாம்; பிரம்மம் ஒன்றுதான் உளது, வடிவத்தால் அது பலவாய்த் தோன்றுகிறது என்பது விளங்கும். உடற்கூற்றில் கட்டுண்டு இருக்குமளவும் ஜீவன் துவைத பாவனையில் உழல்கிறான். ஆதலால் சாதகன் ஒவ்வொருவனுக்கும் பஜனை, ஜபம், தியானம், பாராயணம், சாஸ்திர ஆராய்ச்சி, ஸ்தோத்திரம், சத்சங்கம் முதலிய சாதனங்கள் இன்றியமையாதவை.

பூரண சித்த சுத்தி யடைந்தவனுக்குமட்டும் கர்மமில்லை. அது தானாகவே அற்றுவிடுகிறது. கடவுள் அவனை வினையாற்ற விடுகிறதில்லை. ஆனால் அஞ்ஞானத்தில் இருக்குமளவும் ஒருவன் கர்மம் செய்யாமல் இருக்க முடியாது. ஆதலால் சாதகன் மனதைப் பகவானிடம் நாட்டித் தனது கடமைகளைப் பற்றின்றிச் செய்ய வேண்டும். இதுதான் கர்மயோகத்தைப்பற்றிய ஸ்ரீ ராமகிருஷ்ணரது அபிப்பிராயம். தம்பெயரால் புதிய மரபு ஒன்றை ஜகன்மாதா ஸ்தாபிப்பாள் எனவும் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் தெரியவந்தது. சர்வமத சமரசமே அந்த மரபின் முக்கிய நோக்கமாக இருக்குமென்றும், அருள்தாகமும் மோக்ஷத்தில் இச்சையும் உடையவர்கள் அநேகர் உலகெங்குமிருந்து தம்மை வந்தடைவார்கள் என்றும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொல்லியதுண்டு.

ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் தம்மை ஈன்ற அன்னை சந்திரமணி தேவிபால் இருந்த அன்பு பகரவொண்ணாதது. தக்ஷிணேசுவரத்தில் வதிந்து கங்கா தீரவாசம்

செய்த அந்த வயோதிக அம்மையாருக்குத் தாம் செய்வதற்குரிய பணிவிடைகளை யெல்லாம் அவர் குன்று ஊக்கத்துடன் செய்து வந்தார். அந்தியகாலம் அணுகிவிட்டதை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரைப் புண்ணிய நதிக்கரையில் வைத்து அவரது தாளிணையில் புட்பம் சாத்திய பின்பே தமது கடமை முற்றுப்பெற்றதென உணர்ந்தார். ஆனால் தாம் சந்நியாசியானபடியால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிரார்த்த சடங்கு ஒன்றும் செய்யவில்லை. தமது தமையனாரின் புதல்வன் இராமலாலவைக் கொண்டு அக்கிரியைகளைச் செய்து முடித்தார். இவரது மாத்ரு பக்தி ஸ்ரீமத் சங்கராசாரியார், பட்டினத்தடிகள் முதலியோரின் வாழ்க்கை வைபவங்களை நமக்கு நினைவூட்டுவதாகும்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## திருத்தொண்டர் குழாம்

தேவேந்திரநாத தாகூர் காலமான பின்பு, கேசவ சந்திர சேனர் என்ற பெரியார் ஒருவர் பிரம்ம சமாஜத்துக்குத் தலைமை வகித்து வந்தார். இவர் ஆங்கிலக் கல்வியில் முதிர்ச்சியடைந்திருந்தது போலவே இந்துமத ஆராய்ச்சியிலும் மிகத்தேர்ந்தவர். வாக்கு வன்மையிலும் சொற்பொழிவுத் திறமையிலும் இவர் மிகப் பெயர் பெற்றவர். அத்துடன் ஆத்ம சாதனத்திலும் சிறிது முதிர்ச்சியடைந்து தெய்வீகக் காட்சிகள் காணுதற்குரிய அருள் நிலையும் எய்தி இருந்தார். ஆதலின் வங்க நாட்டு இளைஞர்கள் அனைவரும் கேசவ சந்திர சேனரைப்போற்றி வந்தார்கள். இவரது பெருமையையும் கீர்த்தியையும் கேள்வியுற்ற ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தாமாகவே ஒருநாள் இவரைப் பார்க்க இவர் வீட்டுக்குச் சென்றார். முதல்நாள் பழக்கத்திலேயே பரமஹம்ஸரது மகிமை கேசவருக்குக் கொஞ்சம் தெரிய வந்தது. அதுமுதல் அவர் அடிக்கடி தக்ஷிணேசுவரத்துக்குத் தமது சகாக்களுடனும் சீடர்களுடனும் போவதுண்டு. பிரம்ம சமாஜ

ஆண்டு நிறைவு விழாவுக்கும் பரமஹம்ஸர் பன்முறை அழைக்கப்பட்டிருந்தார். நாளடைவில் ஸ்ரீ ராமகிருஷ்ணர்மீது கேசவ சந்திரருக்குப் பெரும் பக்தி யுண்டாயிற்று. மேலும், மதத்தைப்பற்றி அவர் கொண்டிருந்த பல அபிப்பிராயங்கள் பரமஹம்ஸருடன் பழகிய பின்பு மாறிவிட்டன.

ஒவ்வொரு மதத்திலுமுள்ள நல்ல அம்ஸங்களை எடுத்துச் சேர்த்துப் புதிய மதமொன்று உண்டாக்கவேண்டுமென்பது கேசவரது கொள்கை. பிரம்ம சமாஜத்தின் நோக்கமும் அதுவே. ஆனால் பெரியோர்கள் கண்ட ஒவ்வொரு மதமும் கடவுளை அடைதற்கான ஒவ்வொரு மார்க்கமாதலால், சாதகன் தனது இயல்புக்கு ஏற்ற ஏதாவது ஒரு மார்க்கத்திலேயே முயலவேண்டும் என்பதும், வேண்டுமானால் ஏனைய மார்க்கங்களைத் தன் மார்க்கத்துக்கு அனுசரணையாக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்பதும் பரமஹம்ஸரது துணிபு. ஓர் ஊருக்குப் போவதற்குப் பல வழிகள் இருப்பினும், ஒருவன் ஏதாவது ஒரு வழியே போதல்தான் நலம் என்பார் அவர். பரப்பிரம்மம் நிர்க்குண நிராகாரமாயிருப்பது போலவே, சகுண சாகாரமாயும் இருக்கிறது என்பதைக் கேசவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்து தெரிந்துகொண்டார். விக்கிரக ஆராதனை கூடவே கூடாதென்று எண்ணியிருந்த கேசவ சந்திரர் அந்த எண்ணத்தையும் நாளடைவில் மாற்றிக்கொண்டார். ஒரு நண்பரது புகைப் படம் அந்த நண்பரை ஞாபகம் ஊட்டுவது போல விக்கிரகம் கடவுளின் ஞாபகத்தை ஊட்டுகிறது என்பார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இகலோக போகங்களை அனுபவித்துக் கொண்டே பாரமார்த்திகமும் பயிலவேண்டும் என்பது பிரம்ம சமாஜத்தாரது நோக்கம். ஸ்ரீ ராமகிருஷ்ணரது கொள்கை இதற்கு முற்றும் மாறானது. ஒரு மனிதன் எவ்வளவுக் கெவ்வளவு கடவுளை நோக்கிச் செல்லுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு உலக ஆசையை விட்டொழிக்கிறானென அவர் கூறுவார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தாம் பெற்றிருந்த அருட் செல்வத்தைத் தாம் மட்டுமே அனுபவித்து இன்புற விரும்பவில்லை. அதை உலகெங்குமுள்ள உத்தமர்கட்கு ஊட்டவேண்டுமென்பது அவரது பேரவா. இப் பேரானந்த போகத்தைத் தாமும் அனுபவித்துப் பிறர்க்கும் எடுத்துச் சொல்லவல்ல புனிதர்கள் தம்மிடத்து வரவேண்டுமென்று ஜகன்மாதாவிடம் இவர் பிரார்த்தனை செய்திருந்தார். கருணாநிதியாகிய தேவியும் தன் அருட்புதல்வன் விண்ணப்பித்தவாறே பக்குவர்கள் பலரைத் தருணம் வரும்போது அவரிடமழைத்து வருவதாக மொழிந்தருளினாள். அந்த நன்னாள் என்று வருமோவென்று ஸ்ரீ ராமகிருஷ்ணரும் ஏங்கி யிருந்தார். உலகப் பற்றுடையவர்களுடன் பேசிப்பேசி அவரது வாயும் புண்ணாய்ப் போயிருந்தது. இது குறித்து அவர் அம்பிகையிடம் சதா பிரார்த்தித்த வண்ணமாயிருந்தார். கடைசியாக அந்த மகா பக்குவர்களும் ஒருவர்பின் ஒருவராக இவரை வந்தடைந்தனர். பலநாட் பழகிய நண்பர்களைப்போல் பரமஹம்ஸ தேவரும் அவர்களைப் பிரீதியுடன் வரவேற்றுப் பாராட்டினார். அத்திருக்கூட்டத்தைச் சார்ந்த சிலர் நித்திய சித்தர்களென்றும், அவர்கள் இப்பூவுலகிற் பிறந்தது பிறரை உய்விக்கும் பொருட்டேயென்றும் அவர் சொல்லியுள்ளார். அப்புனிதர்கள்பால் இவர் காட்டிய பேரன்பு அவர்களது உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்தது. ஆதலால் அவர்கள் மேன்மேலும் பரமஹம்ஸரிடம் சரணாகதியடைந்து முடிவில் அவரது சிஷ்யர்களாக அவரது திருவடிகளில் அமர்ந்தனர். அவர்களைத் தமது அந்தரங்க சிஷ்யர்களென்றும் ஈசுவர கோடிகளென்றும் பரமஹம்ஸர் கூறியுள்ளார்.

தமது சிஷ்யருள் ஒரு சிலரைத் துறவறத்துக்கென்றே ஸ்ரீ ராமகிருஷ்ணர் பழக்கி வந்தார். அவர்களிற் பெரும்பாலோர் மணம்புரியாத இளைஞர்கள்; கல்லூரிகளில் உயர்தரக் கல்வி பயின்றுகொண்டிருந்தவர்கள். அவர்களது உன்னத பக்குவத்தை பரமஹம்ஸருக்கு

நன்கு புலனாயிற்று. ஆதலால் துறவின் பெருமையைப் பற்றியே அவர் இவர்களிடம் பேசுவார். பறவைகளால் கொத்தப்படாத கனிகளே கடவுளுக்குப் படைப்பதற்குத் தகுதியுடையன. அதுபோல உலக ஆசை யென்னும் தீமையால் தீண்டப்படாதவர்கள்தான் கடவுளுக்கு அத்யந்தப் பிரியமானவர்கள். விவாகம் எல்லாவித ஆசைகளுக்கும் பந்தங்களுக்கும் மூலகாரணம். பணத்தாசை பிடிப்பதற்குங்கூட அதுவே காரணமாகும். ஒட்டடை நிறைந்த வீட்டுக்குள் இருப்பவன் எவ்வளவு எச்சரிக்கையா யிருந்தாலும் அவன்மீது தூசு படியாமலிராது. குடும்பத்திலிருப்பது அதுபோன்றேயாம். வெட்ட வெளியில் இருப்பவனுக்குத் தூசுபடியும் என்னும் பயமே இல்லை. இதைப் போன்றது துறவியின் வாழ்வு. அவனுக்கு ஈசுவர நாட்டத்தைத் தவிர வேறு எந்த எண்ணமும் இருக்கவேண்டியதில்லை. இவ்வாறெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர்களுக்குப் போதித்துத் தியாக புத்தியூட்டிவந்தார்.

துறவறத்துக்கென ஸ்ரீ ராமகிருஷ்ணரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுள் தலைமையானவர் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள். நரேந்திர நாதர் என்பது அவரது பிள்ளைத் திருநாமம். அவர் தமது மூன்றாவது பிராயத்திலிருந்தே இரவில் உறங்கும்போதெல்லாம் ஒருவித ஜோதியில் ஐக்கியமாகி யோக நித்திரையில் அமரும் வழக்கம் பெற்றவர். பதினெட்டாவது வயதிலேயே நரேந்திரநாதர் பி. ஏ. பரீட்சையில் சிறப்பாகத் தேர்ச்சியடைந்து வக்கீல் உத்தியோகத்துக்குப் படித்துக்கொண்டிருந்தார். தூய்மை, பராக்கிரமம், பகுத்தறிவு முதலிய நற்குணங்கள் பல வாய்க்கப்பெற்றவர் இவர். அவ்விளம் பிராயத்தில் நவீன மனப்போக்கு அவர்பால் குடிகொண்டிருந்தது. சொன்னதை யெல்லாம் நம்பிக்கொள்வது அல்லது கேட்டுக்கொள்வது என்பது அவரிடம் கிடையவே கிடையாது. தாம் கடவுளைக் கண்டதில்லை யாதலால் கடவுள் ஒருவர் உண்டெனவும்

அவர் ஒப்புக்கொள்வது இல்லை. "ஐயா, தாங்கள் கடவுளைக் கண்டது உண்டா?" என்று தாம் பார்த்த பெரியார் பலரை இவர் அடுத்தடுத்து வினவி வந்தார். தேவேந்திர நாத தாகூர், கேசவ சந்திரசேனர் முதலிய பெரியார் பலரையும் கேட்டாகிவிட்டது. ஆனால் திருப்தி யான மறுமொழி அவருக்கு எங்கும் கிடைக்கவில்லை. கடைசியாகத் தக்ஷிணேசுவரத்தில் ஒரு பெரியார் வசிப்ப தாகக் கேள்வியுற்று நரேந்திரர் அங்கே சென்றார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பண்டைக்காலத்துப் பாரமார்த்திகமே வடிவெடுத்து வந்தாற் போன்றவர்; நரேந்திரரோவெனில் புதிய கல்வி முறையும் மனப் போக்கும் உருவெடுத்து வந்தவர். ஆகவே இந்த இருவர் வாயிலாகப் புராதனப் பெருமையும் புதிய கொள்கையும் சந்தித்தன.

நரேந்திரநாதரை முதன் முதலில் கண்டதும், "அப்பா, உனக்காக நான் எத்தனை நாள் ஆவலுடன் காத்திருந்தேன்?" என்று சொல்லிக்கொண்டே ஸ்ரீ ராம கிருஷ்ணர் சமாதிநிலை யெய்திவிட்டார். திரும்பவும் புறவுணர்ச்சி பெற்றதும் நெடு நாள் பிரிந்திருந்த தமது அருமையான நண்பனைச் சந்தித்தவர்போல நரேந்திர ரைப் பார்த்துப் பார்த்து அவர் பரவசமடைந்தார். "சுவாமி! தாங்கள் கடவுளைக் கண்டது உண்டா?" என்று அந்த இளைஞர் வினவியதைக் கேட்ட பரமஹம் ஸர், "ஆம் நான் அவரை இடையறாது காண்கிறேன். ஊனக்கண்ணால் நான் உன்னைப் பார்ப்பதைவிடப் பன் மடங்கு ஆழ்ந்து அகக்கண்ணால் நான் அவரை அறி கிறேன். வேண்டுமானால் உனக்கும் காட்ட முடியும்" என்றார். இக்கூற்றைக்கேட்ட நரேந்திரருக்கு உரோமம் சிலிர்த்தது. தாம் வேண்டி நாடிய உறுதிப் பொருள் இப்பெரியாரிடமிருந்தே அகப்படும் என அவர் உணர்ந் தார். எனினும் ஸ்ரீ ராமகிருஷ்ணரது பேச்சுக்கும் செய் கைக்கும் அணுவேனும் முரண்பாடு இல்லை யென்பதை அநேக விதங்களில் சோதித்துப் பார்த்த பின்புதான்

நரேந்திரர் அவரைத் தமது குருவென அங்கீகரித்து அடி பணிந்தார். பாரமார்த்திகத்தில் அவரது நம்பிக்கை அதிகரிக்க அதிகரிக்க லௌகிகத்தில் அவர் பெறுதற்கிருந்த உயர் பதவிகளை யெல்லாம் ஒருங்கே நீத்தார்.

ஒரு மனிதன் மணம் புரிவதும் புரியாதிருப்பதும், சந்நியாசியாவதும் இல்வாழ்வோனாய் இருப்பதும் அவன் இஷ்டம்போல நடப்பவை அல்ல; ஈசுவரன் கிருபையின் படியே இவை நிகழும் என்பது பரமஹம்ஸரது கொள்கை. ஆதலால் எல்லாரும் இறைவனிடம் சரண் புகுந்து அவன் ஆட்டுவித்த வண்ணம் ஆட ஆயத்தமா யிருக்கவேண்டும், என்று அவர் சொல்லுவார். ஸ்ரீ ராம கிருஷ்ணர் சிலருக்குச் சந்நியாச ஆசிரமம் தந்தருளியது போலவே இன்னும் சிலருக்கு இல்லறத்தில் இருந்த படியே அருள் நோக்கம் எய்தச் சாதனம் பயிலுமாறு போதித்தார். பக்தன் ஒருவன் பற்றற்று உலகில்வாழ வேண்டும். பெண்டிர் பிள்ளைகளைத் தனக்குரியவர்கள் எனப் பாவியாது, தன்பால் கடவுளால் ஒப்புவிக்கப் பட்டிருக்கும் அவர்களைப் பேணுவதே தனக்குரிய கடன் எனக் கருதுதல் வேண்டும். இதுவே உத்தம கிரகஸ்தன் ஒருவனது உயர் நோக்கமாகும். இல்லற வாழ்வு எவ்வாறு நடத்தவேண்டும் என்பதை ஸ்ரீ ராம கிருஷ்ணர் தமது வாழ்விலேயே காட்டியுள்ளார். ஆத லால் அவரையே இலட்சிய புருஷனாகக் கொண்ட கிரகஸ்த சிஷ்யர்கள் பலர் அவரிடம் சரண் புகுந்தனர். துர்க்க சரண நாகர் என்பவர் அவர்களுக்குள்ளே குறிப் பிடத்தக்கவர் ஆவர்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரது பெருமை இதற் குள்ளாக எங்கெங்கும் அதிவேகமாய்ப் பரவிக்கொண்டு வந்தது. விரிந்த மலரைத் தேடி வண்டுகள் வருவது போல இவரை நாடிப் பல பக்தர்களும் புனிதர்களும் வந்து கொண்டிருந்தார்கள். லௌகிகத்தில் பெரும் பதவியும் கீர்த்தியும் வாய்க்கப் பெற்றவர்களும் இடை யிடையே இவரைப் பார்க்க வந்தார்கள். கல்வி யறி

வுடைய அப்பெரியார்களைக் காணச் சில சமயங்களில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாமே அவர்களது இருப்பிடம் தேடிச் செல்லுவார். இவ்விதம் மகாராஜா யதீந்திர மோகன தாகூர், கிருஷ்ணதாஸ்பால், சுவாமி தயானந்த சரஸ்வதி, ஈசுவர சந்திர வித்தியாசாகர் முதலிய பெரியார்களை இவர் சந்திக்க நேரிட்டது. பரமஹம்ஸ தேவருக்குக் கல்விப் பயிற்சியின்மை தெரிந்த விஷயம். ஆதலால் அவர் கற்றறிவாளரைக் காண நேரும்போதெல்லாம் ஜகன்மாத்ராவைப் பிரார்த்தித்து அவள் பேசுவித்த வண்ணம் பேச ஒருப்படுவார். பரவசநிலையில் நின்று இவர் பேசும் மேலான விஷயங்கள் அவர்களது உள்ளத்தை அடியோடு கவர்ந்துவிடும். நூல் பல கற்றிருந்தும் தங்களுக்குந் தெரியாதிருந்த பல நுட்ப விஷயங்களை இவரிடமிருந்து அவர்கள் தெரிந்துகொள்வார்கள். தர்க்க சாஸ்திரத்தில் நிபுணர்களையும் இவர் சில சமயங்களில் அதி சுலபமாக வாயடக்கி விடுவார். நமது நாடு தாழ்மையுற்றதற்குக் காரணம் நம்மிடத்திருக்கும் மட்டுக்கு மிஞ்சிய பாரமார்த்திக உணர்ச்சியே யென்று கிருஷ்ணதாஸ்பால் போன்ற தேசாபிமானிகள் பரமஹம்ஸ தேவரிடம் கூறியபோது, அறியாப் பிள்ளைகள் போலப் பேசிய அவர்களை இவர் மிகவும் கண்டித்தார். சமய சீர்திருத்தம், சமூகச் சீர்திருத்தம், கல்வி, அரசியல் முதலிய எல்லாத் துறைகளையும் சார்ந்த பெரியோர்களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் சந்தித்துப் பேசியது, நம் நாட்டில் தர்மம் ஒன்றே எல்லாத் துறைகளுக்கும் இயக்கங்களுக்கும் அடிப்படையாக இருக்கவேண்டும் என்பதை அறிவுறுத்தும் பொருட்டேயாம்.

பரமஹம்ஸ தேவரின் அடியார்களது திருக்கூட்டம் நாளடைவில் ஒருவாறு பலத்துவிட்டது. அவர்களிற் பெரும்பாலோர் அடிக்கடி தக்ஷிணேசுவரம் சென்று அங்கு இரண்டு மூன்று நாள் தங்கியிருப்பது வழக்கம். இதன் பயனாக அவர்களுள் ஆன்ம சகோதர வாஞ்சை விரைவில் வளர்ந்து வந்தது. ஆண்டுதோறும் அவர்கள்

ஒன்று கூடி ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜன்மோற்சவத்தைக் குதூகலத்துடன் கொண்டாடுவார்கள். கல்கத்தாவில் தமது சிஷ்யர்களது வீட்டுக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அடிக்கடி எழுந்தருள்வார். அதுபோழ்து பெருந்திரளான ஜனங்கள் அவர் இருக்குமிடத்தில் கூடி விடுவார்கள். பாரமார்த்திக விஷயங்களைப்பற்றி அவர் பகர்ந்தருளிய வசனமிருதமும், சிஷ்யர்கள் கசிந்துருகிப் பாடிய சங்கீர்த்தனங்களும், ஸ்தோத்திரங்களும், பரமஹம்ஸர் அடிக்கடி எய்திய சமாதி நிலையும் எல்லோரது உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்தன. ஜகத் குரு சங்கரரோ அல்லது கௌரங்க தேவரோ இப் பூவுலகில் திரும்பவும் அவதரித்துள்ளாரென எண்ணினர் பலர். அக்கம் பக்கங்களில் நிகழ்ந்த மஹோற்சவங்களுக்கும், பிரம்ம சமாஜத்தாரது திருக்கூட்டங்களுக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சிஷ்யர்களுடன் அடிக்கடி போய் வருவதுண்டு. அவர் சென்ற விடங்களிலெல்லாம் பரவசம் ஊட்டும் அருள் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடியதை அனைவரும் தெற்றென உணர்ந்தனர்.

ஒவ்வொரு பெரியாரது வாழ்விலும் அற்புத சம்பவங்கள் பல நிகழ்ந்திருப்பது வெளிப்படை. அவைகள் பெரும்பாலும் அஷ்ட மகா சித்தி சம்பந்தமானவைகளேயாம். செத்தவனைப் பிழைப்பித்தல் போன்ற செய்கைகள் மானுடர்பால் அச்சம் அல்லது ஆச்சரியத்தை விளைவிக்கலாம். ஆனல் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் நிகழ்த்திய அற்புதங்களில் தனி மகிமையொன்றுண்டு. தமது தபோ பலத்தை யெல்லாம் அவர் வெறும் வேடிக்கை விநோதங்களில் விரயம் பண்ணவில்லை. புல்லியர்களைத் தடுத்தாட்கொண்டு புனிதர்கள் ஆக்கியதே அவர் நிகழ்த்திய பேரற்புதமாகும். மாந்தரது மயக்கத்தைப் போக்கி அவர்களை மேலோர் ஆக்க வல்ல அருள் வன்மையைப் பகவத் சம்பத்து என்று சொல்லுவார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரது பகவதத் சம்பத்துக்குச் சான்று ஒன்றிரண்டு கூறுவோம். அவரது சந்நியாசி சிஷ்யருள்

அற்புதானந்த சுவாமிகள் என்பவர் ஒரு வீட்டில் வேலைக் காரனாக இருந்தவர். கல்வி என்பது அவருக்குக் கிடையவே கிடையாது. வயதிலும் மிகச் சிறியவர். உலக ஆசை எதிலும் தோய்வுறாத தூய்மை ஒன்றே அவரது அணிகலம். பரமஹம்ஸ தேவர் அவரை ஒரு பெரிய பிரம்ம ஞானியாக்கியது அற்புதமாம். ஆதலாலேதான் அவர் அற்புதானந்தர் எனவும் அழைக்கப்பட்டார். உபநிஷதங்களில் அடங்கியுள்ள மந்திரங்களுக்குத் தமது அனுபவத்தை ஒட்டி அவர் வியாக்கியானம் சொல்லியது கேட்டோருக்குத் திகைப்பை உண்டாக்கியது. ஸ்ரீ ராமகிருஷ்ணரது இல்லறச் சீடருள் கிரீஸ்சந்திரகோஷ் என்பவர் பிரசித்திபெற்ற ஒரு நடிகர். கூத்தாடும் தொழிலுக்கு ஏற்றவண்ணம் அவர் பயிலாத துன்மார்க்கம் எதுவும் இல்லை. பஞ்ச மகாபாபங்களிலும் மூழ்கினவர். அவரைப் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தாமாகவே வலியத்தடுத்து ஆட்கொண்டு பரமபக்தராக்கினர். கிரீஸ்சந்திரகோஷுக்கு விமோசனம் இருந்தது என்றால் வேறுயாருக்குத்தான் விமோசனம் இல்லாது போய் விடும்? ஒரு மனிதனது துர்நடத்தையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் எக்காரணத்தைக் கொண்டும் எடுத்துக் காட்ட மாட்டார். ஒருவனிடத்திருக்கும் நன்மைமையை மிகைப் படுத்திக் காட்டி அவனை நல்லவனாக்கி விடுவது அவரது வழக்கம். சமூக நன்மைக்கு உழைப்பவர்கள் இக் கருத்தை அறிந்து கொள்வார்களாக.

ஸ்ரீ ராமகிருஷ்ணரது சிஷ்யருள் பெண் மக்கள் பலர் இருந்தனர். "நாங்கள் எப்போதும் அவரை ஆண்பால் எனக்கருதியதே கிடையாது. எங்கள் இனத்தோடு இனமாகத்தான் அவரைப் பாவித்தோம். அவர் முன்னிலையில் நாங்கள் எவ்விதமான அச்சமும் கொள்ள வில்லை. தடை சிறிதுமின்றி எங்களது அந்தரங்க எண்ணங்களைத் தாராளமாக அவரிடம் தெரிவிப்போம்."— இவ்விதம் அவர்கள் எல்லோரும் பரமஹம்ஸ தேவரைப் பற்றிச் சொல்லியுள்ளார்கள். விவேகம், வைராக்கியம்,

பக்தி இவற்றை அவர்களுக்கும் பரமஹம்ஸர் புகட்டிய தல்லாமல், உலக ஆசையை அறவே ஒழித்தல்வேண்டு மென்றும் சொல்லுவார். பெண் ஆசையைப் போக்க வேண்டுமென்று ஆண் மக்களுக்கு அவர் போதித்தது போலவே, ஆண்மக்கள் வலையில் அகப்படக்கூடாது என்று பெண்ணினத்தவருக்கு அவர் உபதேசிப்பார். பாரமார்த்திக நோக்கமுடைய அந்தப் பெண்மக்களுக்கும் அன்னை சாரதா தேவிக்குமிடையே நெருங்கிய ஆத்ம வாஞ்சையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளைவித்து வந்தார். இவரிடம் தீக்ஷைபெற்று, சாதனங்கள் பல பயின்று, ஆத்மானுபவங்களில் முதிர்ச்சியடைந்த பெண்மக்கள் பலர் இருந்தனர். அவர்களுள் அகோர மணி தேவி அல்லது கோபால அம்மா என்னும் மூதாட்டியை முக்கியமாகக் குறிப்பிடலாம். அநேக ஆண்டுகளாக அம்மாது புரிந்த வாத்ஸல்ய சாதனத்தின் பயனாக அவருக்குப் பால கிருஷ்ணனது திவ்விய தரிசனம் கிடைத்தது. அக் குழந்தை இந்த அம்மையாரோடு கூடிக்குலாவி விளையாடியது மகிமை வாய்ந்த ஒரு தனிப்பெரும் வரலாறாகும்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

## மகா சமாதி

ஆதிரவன் காலையில் உதயமாகும்போது தகதகவென்ற அழகுடன் திகழ்கின்றான்; உருக்குகின்ற உச்சி வேளையில் அவன் மன்னனது மாட்சிமையுடன் மிளிர்கின்றான்; மாலையில் அவன் மீண்டும் மறையுமுன்னே பொன்னொளி வீசிப் பொலிகின்றான். பூலோகத்தில் பெரியார் ஒருவரது திருவவதார வரலாறு அத்தகையதேயாம். அவரது பிள்ளைப்பருவம் தெவிட்டாத சுவை பொருந்தியிருக்கிறது. முதிர்ந்த வயதில் அவரது திருவாழ்வு தெளிவுற்றுத் திகழ்கின்றது. அந்திய காலத்தில் அது சோகரசத்துடன் பொலிகின்றது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரது

புனித வாழ்வின் பெரும் பகுதி பகர்ந்தாய்விட்டது. இப்போது அவரது அந்திய காலத்திற்கு வருகின்றோம்.

1885-வது ஆண்டில் ஸ்ரீ ராமகிருஷ்ணரது உடல் சிறிது சிறிதாகக் குலையத்தொடங்கியது. முதிர்வேனில் வெக்கையில் தேகம் தளர்வுற்று அங்கமெலாம் எரிந்தது. அதிகம் பேசின போதெல்லாம் தொண்டையில் ஒருவித வலியும் உண்டாயிற்று. அவர் இதைப்பற்றி யாரிடமும் தெரிவிக்கவில்லை யாயினும் அடியார்கள் இதைக் குறியால் அறிந்து கவலையுற்றிருந்தனர். அதே ஆண்டில் பாணிஹட்டி என்னும் இடத்தில் நிகழ்ந்த ஸ்ரீ கௌரங்க தேவரது மகோற்சவத்துக்குப் பரமஹம்ஸர் பக்த கோடிகளுடன் சென்றிருந்தார். ஆங்கு ஆனந்தக் கூத்தாடலிலும் சமாதி நிலையிலும் பரவச மெய்தி யிருந்தபோது தீயோர் பலரால் அவர் தீண்டப்பட்டார். அவர் அருள் நிலையில் இருக்குங்கால் புனிதர் அல்லாதார் அவரைத் தீண்டிவிட்டால் அவரது உடல் முழுதும் வலியெடுத்து விடுவது வழக்கம். ஆதலாலே பாணிஹட்டில் நடந்த மகோற்சவத்துக்குப் பிறகு அவரது நோய் அதிகரித்துக் கொண்டே வந்தது. தொண்டை வலி மிகுந்தது. இது ஒரு தீராத நோய் என்று அறிந்த விவேகானந்தர் போன்ற சிஷ்யர்களுக்கு உள்ளம் பகீரென்றது. தகுந்த சிகிச்சைகளை விரைவில் கையாளாவிடின் தங்கள் பரம குருநாதரின் ஆக்கைக்கு அழிவு வருமென்று அஞ்சி, வைத்திய வசதியின் பொருட்டுக் கல்கத்தாவில் சியாம்புகூர் என்னுமிடத்தில் ஒரு விடுதி நியமித்து அங்கு அவரை அழைத்துச் சென்றனர். எனவே பரமஹம்ஸர் இதுகாறும் தமது முக்கிய வாசஸ்தலமாயிருந்த தக்ஷிணேசுவரத்தை விட்டுக் கடைசி முறையாக வெளியேறினர்.

ஷியாம்புகூரில் அமர்த்தப்பட்டிருந்த வீட்டில் பெண்டிர் இருப்பதற்குப் போதுமான வசதி இல்லை. அச்சம், நாணம் அதிகமுடையவரான அன்னை சாரதா தேவியார் ஜனக்கூட்டம் நிறைந்த அவ்வீட்டில் எவ்வாறு வசிப்பாரென்று சிஷ்யர்கள் ஐயமுற்றனர். எனினும் அவர் அவ்

வீட்டின் ஓர் அறையில் யாவருக்கும் தெரியாது இருந்து கொண்டு தம்மை ஆட்கொண்ட பெருமானுக்குக் கஞ்சி முதலிய ஆகாரம் தயாரிக்கும் பெரும் பாரத்தைத் தாமே ஏற்று நடாத்தினர். இடம் பொருள் ஏவலுக்கு ஏற்ற வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று அவரது பதி அவருக்குப் போதித்திருந்தாரன்றோ? அல்லும் பகலும் ஸ்ரீ ராமகிருஷ்ணரது அருகிலிருந்து அவரது உடலைப் பேண விவேகானந்தர் போன்ற இளம் சீடர்கள் முன் வந்தனர். கிரகஸ்த சிஷ்யருள் பொருள் மிகப் படைத்தவர்கள் யாருமில்லை. எனினும் எவ்விதத்திலாவது பொருள் ஈட்டி வைத்தியம் பார்க்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். தங்கள் பெம்மானது திருமேனியைப் பிடித்து வந்த பிணியைப் போக்குவது எவ்வாறு என்ற ஒரே எண்ணம் அவர்கள் அனைவரது உள்ளத்திலும் குடிகொண்டிருந்தது.

பிளவை தொண்டையினுள் இருந்தமையால் அதிகம் பேசுவதும், சமாதிநிலை அடைந்து இரத்தம் சுரக்கச் செய்வதும் சரியல்லவென்று வைத்திய நிபுணர்கள் எச்சரிக்கை செய்திருந்தார்கள். ஆனல் பரமஹம்ச தேவர் அந்த எச்சரிக்கையை சிறிதும் பொருட்படுத்தினரில்லை. பக்தர்களுடன் பாரமார்த்திக விஷயங்களைப்பற்றிப் பேசுவதையும், பரவசமடைந்திருப்பதையும் அவர் பொழுது போக்காகக் கொண்டிருந்தார். இவ்வாறு இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன. ஆனல் வியாதிமட்டும் குணமடைந்தபாடில்லை. சிறிது சிறிதாக நோய் வலுத்துக் கொண்டே வந்தது. பகவானுக்குத் தாம் பட்ட கஷ்டமெல்லாம் வெறும் விளையாட்டாக விருந்தது. சிஷ்யர்களோ வெனில் அவருற்ற பிணியைத் தங்களது குருபக்தியைச் சோதிக்க வந்த ஒரு பெருஞ் சோதனையாகக் கருதினர். அவரது வைத்தியத்துக்காக கிரகஸ்த சிஷ்யர்கள் தங்களது இல்லச் செலவைச் சுருக்கியும், ஆபரணம் முதலியவைகளை விற்றும் அடகு வைத்தும் பொருள்கொண்டு வந்து சேர்த்தனர். இளஞ் சிஷ்யர்கள் கல்லூரிப் படிப்பையும் பரீக்ஷையையும் விட்டொழித்துவிட்டுத் தங்க

ளது ஆருயிர்த் தேவரது திருமேனியை அல்லும் பகலும் பராமரித்துக்கொண்டிருந்தனர். வீடு சென்று தங்களது பெற்றோர்களைப் பார்ப்பதையும் அவர்கள் நிறுத்திவிட்டார்கள். இதை விரும்பாத தாய் தந்தையர்கள் தங்களது மக்களை விடமைத்துச் செல்ல நானுவித உபாயங்களைக் கையாண்டு பார்த்தனர். ஆனால் தியாக புத்தி படைத்திருந்த அப்பிள்ளைகள் அவற்றிற் கெல்லாம் இணங்காமல் தங்கள் குருநாதரது திருவடியே கதி யென்றிருந்தார்கள்.

ஜன நெருக்கம் மிகுந்திருந்த ஷியாம்புகூரில் சுத்த காற்றோட்டம் போதா திருந்தமையால் பரமஹம்ச தேவர் ஏகாந்தமான ஓர் இடத்தில் வாசம் பண்ணுவது மேலானதென்று வைத்தியர்கள் தெரிவித்தார்கள். அவ்விதமே அவர் காசிப்பூர் தோட்டத்தில் ஒரு மாளிகைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். எல்லா வசதிகளும் நிறைந்திருந்த ஆங்கு அவர் சுமார் எட்டு மாதகாலம் ஆனந்தமாக வீற்றிருந்தார் வியாதி அதிகரித்தது. தேகம் மென் மேலும் மெலிந்துகொண்டே வந்தது ஒருபுற மிருக்க, அவர் இடையறாது பரவசநிலை எய்தியதும், தம்மை அண்டினவர்களுக்கெல்லாம் அருட்பேறு வழங்கினதும், தேகம் வேறு ஆத்மா வேறு என்பதை அறிவுறுத்தும் பொருட்டே போலும்! "இந்த ஸ்தூல தேகத்தை மாய்க்குமுன் இதன் வாயிலாக ஜகன் மாதா பெரும் அருட்சக்தியை வெளிப்படுத்துவாள்" என்று அவர் சொல்லியிருந்தது இப்பொழுது நடைபெறலாயிற்று. வெறும் சங்கற்பத்தால் அல்லது ஸ்பரிச மாத்திரத்தால் அவர் பாவியையும் புனிதனுக்கிவிடுவார். 1886-வது ஆண்டு ஜனவரி மாதம் முதல்தேதி யன்று விடுமுறை நாளானபடியால் ஏராளமான ஜனங்கள் அவரைப் பார்க்கச் சென்றிருந்தார்கள். பரமஹம்ஸ தேவரது ஆசீர்வாதத்தை வேண்டின அவர்கள்மீது கருணை புரிந்து அருள் நிலையில் இருந்துகொண்டு அவர்கள் எல்லோரையும் தம்மிடம் வரும்படி அழைத்தார். பிறகு ஒவ்வொருவரையும் தனித்தனியே தொட்டுத் தொட்டுப் பேரானந்

தம் துய்க்கவும், ஆனந்தக் கூத்தாடவும், தேவர்களது தரிசனம் காணவும செய்துவிட்டார். ஆதலாலே அத் திருநாள் கற்பதருநாளென இன்றைக்கும் அவரது அடியார்களால் போற்றப் படுகின்றது.

நரேந்திர நாதரால் ஏவப்பட்டு இளைஞர்கள் பலர் பிரபஞ்ச வாழ்வில் விரக்தியடைந்து வந்ததைப் பார்த்த பரமஹம்ஸ தேவருக்கு அடங்கா அகமகிழ்ச்சி யுண்டாயிற்று. ஏனெனில் துறவறத்துக்கெனவே அவர் இவர்களைப் பயிலுவித்து வந்தாரல்லவா? உலகத்தை உய்விப்பதற்கென இவர்கள் உயர்வாழ்வு வாழப்போகின்றனர் எனறெண்ணி அவர் பரமானநத மடைந்தார். உலக ஆசைகளில் கட்டுப்படாதிருந்த இந்தச் சிறுவர்கள்மீது அவர் அளவிலாக் கருணை வைத்து அவர்களுக்கு ஆத்ம சாதனங்கள் கற்பித்து வந்தார். அவர் அருளாலே நரேந்திர நாதருக்கு முடிவான அனுபவமாகிய நிர்விகற்ப சமாதியும் கிடைத்தது. சுமார் பன்னிரண்டு சிஷ்யர்களுக்கு அவர் சந்நியாசம் தந்து, அவர்களைக் காவியுடையுடன் பார்த்துப் பரவச மடைந்தார். பிறகு வசதியான காலம் வரும்வரை காவியுடைகளைக் கழற்றி வைத்துவிடவும் பகவான் அவர்களுக்குச் சொல்லியருளினர். தமது அருட் செல்வத்தைத் தாங்களும் அனுபவித்து அகிலமெங்கும் பகிர்ந்தளித்திடவும் வல்ல பாலிய சந்நியாசிகளை நியமித்தானவுடன் தாம் மண்ணதனில் பிறந்ததன் நோக்கம் முற்றுப்பெற்று விட்டதெனப் பரமஹம்ஸ தேவர் உணர்ந்தார்.

அந்த வேனிற்கால முழுதும் அவரது தேகம் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தது. "உங்களுடைய இச்சையால் அல்லவா இத்தேகம் இன்னும் இழுத்துக்கொண்டு நாள் தள்ளுகிறது" என்று சிஷ்யர்களிடம் அவர் பகர்ந்தார். தங்களது உள்ளத்தில் என்றைக்குமே குடிகொண்டுவிட்ட குருதேவர் இனிப் புற உடலை உகுத்துவிட்டால்தான் என்ன எனச் சீடர்களும் உணர்ந்தார்கள். ஆகஸ்டுமாதம் 9-ம் தேதி பஞ்சாங்கம் வருவித்து நாட் பலன் வாசிக்கச் சொன்னர். அம்மாதம் 16-ம் தேதி பரியந்தம் நாள் பலன் கேட்டுவிட்டுப் பிரயாணம் போவதற்கு நாள் குறித்துவிட்டவர்போல வாசிப்பதை அவர் நிறுத்திவிடச்சொன்னர். பிறகு ஒரு நாள் நரேந்திரரைத் தனியாகத் தம்மிடம் வரவழைத்தார். குருவும் குருவுக்குகந்த சிஷ்யருமாய் இருவரும் ஆழ்ந்த சமாதியில்

அமர்ந்துவிட்டார்கள். அப்போது திரிலோகத்தையும் புரட்டிவிட வல்ல அருட்சக்தி யொன்று தம்முட் பிரவேசிப்பதை சிஷ்யர் உணர்ந்தார். நெடுநேரத்துக்குப் பிறகு இருவருக்கும் சமாதி கலைந்தபோது பரமஹம்ஸ தேவர் கண்ணீர் சொரிந்துகொண்டு, "பிள்ளாய்! இத்தரணியில் தர்மத்தை நிலை நாட்டுதற்கென எனது தபோ பலன்களை யெல்லாம் உன்பால் இன்று ஒப்புவித்து விட்டேன். முழுமனத்துடன் இப்பெருங் கடனை ஆற்றுவாயாக" என்று பகர்ந்தருளினார். குரு ஆக்ஞையை சிஷ்யர் சிரமேற்கொண்டு எத்தகைய அரும்பெரும் காரியங்கள் ஆற்றினார் என்பது உலகறிந்த விஷயம். பின்னர், 1886-வது ஆண்டு ஆகஸ்டுமாதம் பதினாறுந்தேதி சோமவாரத்தன்று அதிகாலையிலே பகவான் ஊனுடலை நீத்துத் தமது யதார்த்த சொரூபமாகிய அகண்ட சத்-சித்-ஆனந்தத்தில் ஆழ்ந்து மகா சமாதி யடைந்தார்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரஹம்ஸ தேவர் தாம் ஓர் அவதார புருஷரென்று பன்முறை தமது அந்தரங்க சிஷ்யர்களிடம் பகர்ந்ததுண்டு. அவர் நோய் வாய்ப்பட்டிருந்தபோது இக்கூற்றை விவேகானந்த சுவாமிகள் சிறிது சந்தேகித்தார். அதைக் குறிப்பால் அறிந்த பரமஹம்ஸர், "இராமனாகவும் கிருஷ்ணனாகவும் அவதரித்த அதே புருஷன் இத்தேகத்தில் இராம கிருஷ்ணனாக வந்துள்ளான்" என்றார். தாம் மற்று மொருமுறை சுமார் இருநூற்றைம்பது வருஷங்களுக்குப் பிறகு பரத கண்டத்தில் வடமேற்குப் பக்கத்தில் அவதரிக்கப் போவதாகவும், அதுபரியந்தம் தாம் இப்போது தாங்கிவந்த திருமேனியை அருவுருவாக வைத்திருப்பதாகவும் அவர் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார். சிற்றறிவாளராகிய யாம் அவரது கூற்றை ஆராயவும் கூடுமோ? அவர் மகிமை முழுவதையும் யார் அறிந்திடுவோர்? அவர் அருளாலன்றி யார் அறிவார் அவர் பெருமையை! அவரது அடியிணையை வணங்கவும், அவரது மகிமையை அறியவும் நம்மீது அவரது அருள் சுரந்து பெருகுமாக.

ஓம் தத் சத்